# திருமுருகாற்றுப்படை

## பொருள்விளக்கமும் விருத்தியுரையும்



சென்னை :

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

வெளியிட்டது.

 —— [விலை ரூ. 1—25



ஸ்ரீ முருகக் கடவுள்.

# முகவுரை

நக்கீரர் இயற்கைப் புலவர். இயற்கையை ஓவியமாகச் சித்திரிப்பவர். பழமுதிர்சோலையின் நூபுரகங்கை யென்னும் அருவியின் வர்ணனை நெஞ்சை யள்ளும். முருகு என்பது மனம் வாக்குக் காயங்களுக்கு எட்டாத பரமசக்தி. அதனை மனித வடிவமாக உருவகப்படுத்தியதற்கு ஏற்ப ஒவ்வோர் சிரம் கரம் இவற்றின் தொழிலை வியப்புறும் வண்ணம் வர்ணிக்கின்றார். நிறைந்த சிறந்த உயர்ந்த கற்பனை யுடையவர். இந்நூலைக் காலையில் கீழ்க்கடலில் கதிரவன் உதித்தலுடன் தொடங்குகின்றார். மானிட வாழ்வின் குழந்தைப் பருவமும், பக்தியின் தொடக்கமும், உலக நாகரிகத்தின் ஆரம்பப் பருவமும் ஒருங்கே நினைவூட்டுகின்றார். திரிமூர்த்திகளும் தலைமை வேண்டித் திருவாவினன்குடியைச் சேர்வதை இவர் வர்ணித்தது மிகமிக அற்புதமானதோர் ஓவியமாகும். மகளிர் அலங்காரஞ் செய்வதின் கற்பனை உயர்ந்த நாகரிகப் பிரியர்களுக்கு என்றும் குன்றாத உவகையும் யூகமும் ஊட்டுவதாகும். மாந்தர் பொருட்குறை யின்றிக் குற்றம் தவிர்ந்து என்றும் இன்புடையராகவே திகழவேண்டுமென்பது இவரது பேரவா; மக்கள் இனிய மொழியே பேசவேண்டும், பிறர் வருந்தும் வண்ணம் பேசலாகாது; அது இசைப்பயிற்சியாலேயே இயலும் என்ற கருத்துடையவர்.

நல்லியார் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவலர் இன்னரம் புளர
நோயின் றியன்ற யாக்கையர்............

இம் மொழிகளை யூன்றி யனுபவிக்கவும்.

இந்நூலில் உள்ள உயர்ந்த கருத்துக்களும், இனிய கவிதையும், உள்ளங் கவரும் ஒவியமும் கண்டு பேராவல் பற்றி உரை யெழுதத் துணிந்தனன். பிழையிருப்பின் அன்பர் பொறுத்து ஆதரிக்க வேண்டும்.

ஜமதக்னி

# நக்கீரர் வரலாறு

கடைச்சங்கத்தின் புலவருள் தலைமைபெற்று விளங்கியவர் நக்கீரர். இவரது இயற்பெயர் கீரனார். 'ந' சிறப்புப் பெயர் தருவதோர் இடைச்சொல். இவர் மதுரைக் கணக்காயனாரின் மகனார். தந்தையார் ஓர் நல்லிசைப் புலவர் எனத் தெரிகின்றோம். அந்தண மரபினர். நக்கீரருக்கு வடமொழிப் பயிற்சியும் உண்டு. நக்கீரர், நக்கீரனார், நக்கீர தேவ நாயனார், மதுரை நக்கீரர் என இவர் அழைக்கப்பெற்று வந்தார். இவரது ஊர் மதுரை. இவர் மதுரைப் பட்டி மண்டபம் புகுந்து வடமொழியே சிறப்புடைய தென்றும் தென்மொழி இழிந்ததென்றும் முரண்செய்த குய்க்கொண்டான் என்பவனை இறக்கப் பாடிப் பின்னர்ப் புலரும் வேண்டப் பிழைக்கப் பாடினார் என்று வழங்குகின்றது.

மூடத்திருமாறன் கடைச்சங்கம் கண்ட காலத்தில் இவர் புலவர் திலகம் எனத் திகழ்ந்தார்; அகத்தியரிடம் இலக்கணம் உணர்ந்தவர் எனக் கூறப்படுகின்றது. இறையனாரகப் பொருளுக்கு உரை கண்டவர் இவரே.

வங்கியசூடாமணி பாண்டியன் கட்டிய பொற்கிழியைப் பெறுவதன் நிமித்தம் தருமி யென்பவன் திருவாலவாயுடையாரிடம், "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி" என்னும் திருமுகப் பாசுரம் பெற்றுவந்து பாடிப் பொற்கிழி யறுத்து எடுத்துக்கொள்ளப் போகுஞ் சமயத்து, நக்கீரர் தடுத்துப் பாவில் பொருட்குற்றம் உள்ளதென்றார். இதனைத் தருமி திருவாலவாயாரிடம் விண்ணப்பிக்க, எம்பெருமான் புலவர் வேடந் தரித்து அவை புகுந்து நக்கீரரிடம் தர்க்கிக்க

அவர் பெருமானை வரம்பிகந்து பேசினர். சிவபெருமானின் கோப நெருப்பினல் பொற்றாமரையில் வீழ்ந்து வணங்கினர். பெருமான் சினந்தணிந்தருளினர். எனினும் நிந்தையால் புலவர் குட்டநோய் பெற்றார். அது தீருமாறு வேண்டவும் கைலை தரிசிக்கத் தீரும் என்றனர் பெருமான். அது நிமித் தம் புலவர் கைலை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்.

வழியில் ஓர் பொய்கையும் ஆலமரமும் உள்ள இடத்தில் தங்கிப் பூசை புரிந்துகொண்டிருக்கும் சமயத்து ஆலமரத்தி னின்றும் ஓர் இலை விழுந்தது. அதன் ஓர் பாகம் நீரிலும் ஓர் பாகம் தரையிலுமாக வீழ்ந்ததும், நிலத்தில் உள்ளது பறவை உருவமும் நீரின் பாகம் மீன் உருவமுங் கொண்டு பூசலிடச் சிவபூசையிலிருந்த நக்கீரர் சற்றே மறதியுற்று அவ் வேடிக்கையைக் காணலுற்றார். பூசை வழுவுறுவாரைக் கைப் பற்றும் அயக்கிரீவன் என்னும் ஓர் அரக்கன் அவரைத் தூக் கிச் சென்று தன் குகையில் அடைத்துச் சென்றான். அவ ரோடு சிவபூசை தவறியவர் ஆயிரவர் ஆனதால் அவர்களை விழுங்குந் தினம் அணுகிவிட்டதென்று புலவர்களனைவரும் நக்கீரரைப் பார்த்து வருந்தினர். நக்கீரர் மனம் உருகித் திருமுருகாற்றுப்படையைப் பாடியருளினர். குகப்பெரு மான் தோன்றி வேற்படையால் அசுரனைத் தடிந்து நக்கீர ரைக் காளத்தி சென்று கைலை தரிசிக்குமாறு அருளிச் சென்றனர்.

நக்கீரரும் சீகாளத்தி சென்று பொன்முகரி ஆற்றில் மூழ்கிக் கைலையைத் தரிசித்ததும் குட்டம் நீங்கப்பெற்றார். அங்குப் புலவர் பெருமானர் 'காளத்திபாதி கைலைபாதி' பாடியருளினர். இதனைத் திருவாலவாயுடையார் திருவிளை

யாடற் புராணம் முதலியவற்றில் இவரது வரலாறுகக் காண்கின்றோம்.

இவர் இயற்றிய நூல்களாவன :—

| | | |
|---|---|---|
| திருமுருகாற்றுப்படை | | |
| நெடுநல்வாடை | | |
| நற்றிணையியல் | ஏழு | செய்யுள் |
| குறுந்தொகை | எட்டு | ,, |
| அகநானூறு | பதினேழு | ,, |
| திருவள்ளுவமாலை | ஒன்று | ,, |

முதலியன. பதினோராந்திருமுறையில் திருமுருகாற்றுப் படையுடன் இன்னும் வேறு ஒன்பது பிரபந்தங்களும் இவர் பாடியதாகக் காணப்படுகின்றன.

---

# “ திருமுருகாற்றுப்படை ”—விளக்கம்

அகத்திணை புறத்திணை இரண்டனுள் திருமுருகாற்றுப் படை புறத்திணைக்கு உரியது. இது புலவராற்றுப்படை யெனவும், முருகு எனவும் வழங்கும். ஆசிரியப்பாவால் அமைந்தது; 317 அடிகள் கொண்டது. பதினோராந் திரு முறைப் பிரபந்தவரிசையில் இது சேர்க்கப்பட்டுள்ளது. குகப்பெருமானின் திருவருளைப் பெற விரும்புவோர் இதனைப் பத்தியுடன் பாராயணம் பண்ணுதல் நலம் என்பது பெரியோர் கொள்கை.

நக்கீரர் உரைத்த திருமுருகாற்றுப்படையை நாள் தோறும் ஓதினால் மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தரு ளித் தாம் நினைத்த பொருளெல்லாம் தருவன் என்று கூறுவர்.

“நக்கீர ரோதிய வளமைசேர் தமிழுக்காக நீடிய கரவோனே.”

“நக்கீரர் சொல் தித்தித்ததே” என்று அருணகிரியா ரும் இன்னும் பல புலவர்களும் வேறு வேறு விதமாகவும் புகழ்ந்துள்ளனர்.

ஆற்றுப்படை என்பது கூத்தர் முதலியவர்களில் ஒருவன் ஒரு கொடையாளியினிடத்துத் தான் அடைந்த பெரும் பொருளை எதிர்வரும் இரவலர்களுக்குத் தெரிவித்து அவரும் அவ் வள்ளலிடம் சென்று தான் பெற்ற பொரு ளெல்லாம் அடையுமாறு வழிப்படுதல என்பதாம். ஆறு, படு என்னும் இரு சொற்கள் இயைந்து ஆற்றுப்படு என ஒரு சொல் நீர்மைப்படும் பகுதியாய் நின்று தொழிற் பெயர்ப் பொருளுணர்த்தா நின்றது. ஐ விகுதி கொண்டு ஆற்றுப்

படை யென முடிந்தது, அளபெடை போன்று. ஆறு - வழி, படை-படுத்தல். ஒவ்வொருவரும் இங்ஙனம் சொல்லுதற்கு உரியவராயினும் கூத்தர் முதலியோரே எதிர் வந்த கூத்தர் முதலாளோருக்குங் கூறி அவர்களை வழிப்படுத்தியதாகச் செய்தல் மரபு.

> கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியு
> மாற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
> பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
> சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்

என்று தொல்காப்பியத்துப் புறத்திணையியலில் கூறியது காண்க.

ஆடன்மக்களும் பாடற்பாணரும் கருவிப்பொருநரும் இவர்க்குப் பெண்பாலராகிய விறலியரும் என்னும் நான்கு வகையாரும் தாமடைந்த பெருஞ் செல்வத்தை எதிர்வந்த வறியோருக்குத் தெரிவித்து அவரும் ஆண்டுச் சென்று தாம் எய்தியவை எல்லாம் பெறுமாறு கூறிய கூறுபாடாகும்.

இனித் திருமுருகாற்றுப்படை என்பது என்ன? திரு முருகனிடத்து ஆற்றுப்படுதலை உடையது என்பதுபொருள். ஏழாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன் மொழித் தொகை; இது இந்த நூலுக்குக் காரணப் பெயராகும். திரு என்பது வடமொழியின் 'ஸ்ரீ' போன்று மேன்மையையுடைய பொருட்கெல்லாம் அடைமொழி யாகும், மகிமையை உணர்த்தா நிற்கும். முருகு - இளமை, மணம், அழகு, கடவுட்டன்மை; இவற்றையுடைய முருகனுக்காகும். அன் விகுதி குன்றி முருகு எனப் பண்புப்பெயராய் நிற்பி னும் அப் பண்பிப் பொருளையே தந்து நிற்கின்றது. எனின் திருமுருகாற்றுப்படை என்பது திருமுருகனிடத்து வீடு

பேற்றினை எய்துதற்கு ஒருவனை வழிப்படுத்தியது என விரியும். வீடுபேற்றினைப் பெற்றவன் ஒருவன் பெறுதற்குப் பக்குவம் உடைய ஓர் இரவலனைப் பெறும் பொருட்டு முருகனிடத்தே வழிப்படுத்துதலை உடைய பிரபந்தம் என விரித்துக்கொள்க.

இதனை இந் நூலில்,

சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையுஞ்
செலவு.............................................

என்றதனால் அறிக.

கடவுளிடத்தே பெறும் பொருளுக்குக் கந்தழி என்பர். இது பெறும் பொருள்களுள் கொடிநிலை கந்தழி வள்ளி என்ற மூன்றனுள் ஒன்றாகும். கந்தழி யாவது, ஒரு பற்று மற்று அருவாய்த் தானே நிற்குந் தத்துவங் கடந்த பொருள். இதனைப் பற்றியே நக்கீரர் செய்யுள் செய்தார் என்பதாம்.

---

உ

கணபதி துணை

## காப்பு

ஒருமுரு காவென்றென் னுள்ளங் குளிர வுவந்துடனே
வருமுரு காவென்று வாய்வெரு வாநிற்பக் கையிங்ஙனே
தருமுரு காவென்று தான்புலம் பாநிற்பத் தையன்முன்னே
திருமுரு காற்றுப் படையுட னேவருஞ் சேவகனே.

(ப - ரை.) தையல் - ஒரு செட்டி மகளானவள், "ஒரு முருகா என்று-ஒப்பற்ற முருகக் கடவுளே என்று (அடியேன் கூற), என் உள்ளம் குளிர - என்னுடைய நெஞ்சம் குளிருமாறு, உவந்து - மகிழ்ந்து, உடனே - கூறிய தக்கணமே, வரும் முருகா என்று - (அடியேன்முன்) எழுந்தருளுகின்ற முருகக்கடவுளே!" என்றியம்பி, வாய் வெருவா நிற்ப-வாய் குழறி நின்று, "இங்ஙனே - இப்பொழுதே, முருகா - முருகப்பிரானே! நீ, கை தருவென்று-(அடியேனிழந்த) கையினை எனக்குத் தருவாயாக" வென்று அழவும், முன்னே - அச்சமயத்து அச் செட்டி மகள் முன்னே, திருமுருகாற்றுப்படையுடனே வரும் சேவகனே - திருமுருகாற்றுப்படை என்னும் பிரபந்தத்துடனே எழுந்தருளிய வீரனே!, அதுபோலவே எனக்கும் கிருபை செய்யவேண்டும். எ - று.

---

உ

செந்திலாண்டவன் திருவடி துணை

# திருமுருகாற்றுப்படை

## மூலமும்

## விருத்தியுரையும்



### 1.—திருப்பரங்குன்றம்

இணைகுறள் ஆசிரியப்பா

உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற இமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாள்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாள்நுதல் கணவன்
கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை
வாள்போழ் விசும்பின் வள்ளுறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தண்நறுங் கானத்
திருள்படப் பொதுளிய பராரை மராஅத்
துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்
மால்வரை நிவந்த சேணுயர் வெற்பில்
கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோள்
கோபத் தன்ன தோயாப் பூந்துகில்

பல்காசு * நிறைத்த சில்கா ழல்குல்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பின்
நாவலொடு பெயரிய பொலம்புனை அவிரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
துணையோ ராய்ந்த இணையீர் ஓதிச்
செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு
பைந்தாட் குவளைத் தூஇதழ் கிள்ளித்
தெய்வ உத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்
டுளைப்பூ மருதின் ஒள்ளிணர் அட்டிக்
கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்
பிணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி ஒண்தளிர்
நுண்பூண் ஆகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகிழ் இளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்தா தப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி ஓங்கிய † வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்
சூரர மகளி ராடுஞ் சோலை

---

* 'நிரைத்த' (பாட பேதம்.)

† 'வேண்றடு விறல்' (பா - ம்.)

மந்தியும் அறியா * மரன்பயி லடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
பார்முதிர் பனிக்கடல் கலங்கஉள் புக்குச்
சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்
உலறிய கதுப்பிற் பிறழ்பற் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கண் சூர்த்த நோக்கிற்
கழல்கண் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை அலைக்குங் காதிற் பிணர்மோட்
டுருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்
குருதி ஆடிய கூருகிர்க் கொடுவிரல்
கண்தொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்டொடித் தடக்கையின் ஏந்தி வெருவர
§ வென்றடு விறற்களம் பாடித்தோள் பெயரா
நிணந்தின் வாயள் துணங்கை தூங்க
இருபே ருருவி னொருபே ரியாக்கை
அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல்வலம் அடங்கக் கவிழிணர்
மாமுதல் தடிந்த மறுவில் கொற்றத்
தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் † புலம்பிரிந் துறையுஞ்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுடன்
நன்னர் நெஞ்சத் ‡ தின்னசை வாய்ப்ப

---

* 'மரம்பயி' (பா - ம்.)

§ 'வேன்றடு' (பா - ம்.)

† 'புலம்புரித்துறையும்' (பா - ம்.)

‡ 'தின்னிசை' (பா - ம்.)

இன்னே பெறுதிநீ முன்னிய வினையே
செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயில்
திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடற் குடவயின்
இருஞ்சேற் றகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முள்தாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கள்கமழ் நெய்தல் ஊதி எற்படக்
கண்போல் மலர்ந்த * காமரு சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்குங்
குன்றமர்ந் துறைதலும் உரியன் அதாஅன்று

## 1.—திருப்பரங்குன்றம்

(பொழிப்புரை.)

உலக உயிரினங்கள் மகிழுமா றெழுந்து மேருவை வலம் வரும், பலரும் பாராட்டுங் கதிரவனைக் கீழ்க்கடலில் காணப்பட்டாற்போலப் பொறிகள் புலன்களில் தங்குதல் இல்லையாகக் கண் மூடி மனக்கண்ணால் பார்க்கப்படும் விளங்கும் ஒளியினையும், புறக் கண்ணால் காண்பவருக்குத் தூரத்தில் துலங்குகின்ற ஒளியினையும்; தன்னை அண்டினவர் தம் அஞ்ஞானம் ஒழித்துப் பிறவி நோயை நீக்கிக் காக்கும் வலிய அழகிய அடியினையும், பகைவரை யொழித்த இடிபோலும் பெருமை வாய்ந்த கரத்தினையும் உடைய, குற்றமற்ற கற்பும், ஒள்ளிய நெற்றியும் உடைய் தெய்வயானையின் கணவன்;

கடலில் நீர் முகந்து முதிர்ந்த கருப்பொருந்திய பெரியமேகங்கள், சந்திர சூரியர் இருள் நீக்கும் வானத்திடத்தில் நெருங்கிய

* 'காமர்' (பா - ம்.)

துளிகளைச் சிதறிக் கார்காலத்து முதன்மழை பெய்து விட்டக் குளிர்ந்த மணங் கமழ்கின்ற கானகத்திடத்து இருளுண்டாகத் தழைத்த பருத்த அடியினையுடைய கடம்பினது தேருருள் போலும் வட்டப்பூவின் குளிர்ந்த மாலை புரளும் மார்பினன்;

பெரிய மூங்கில் வளர்ந்துள்ள வானத்தின் ஓங்கிய மலையில் கிண்கிணி சூழ்ந்த ஒள்ளிய சிவந்த சிறிய அடியினையும், திரண்ட காலினையும், துவளும் இடையினையும், மூங்கில் போலும் தோளினையும், இந்திரகோபம் போலும் நிறம்பிடியாத சிவந்த அழகிய புடைவையினையும், பல மணிகள் வரிசையாகக் கோர்க்கப் பெற்ற மேகலை அணிந்த அல்குலினையும், ஒருவர் கையினாலும் சிறப்பித்து அலங்கரிக்கப் பெறாத அழகினைத் தமக்கியல்பாகப் பெறுகின்ற அழகினையும், சாம்பூநதம் என்ற பொன்னினால் இயன்று விளங்கும் பூணினையும், நெடுந்தூரங் கடந்து விளங்கும் குற்றந் தீர்ந்த உடல் நிறத்தினையும், பொருந்திய தெய்வமகளிர்;

தோழியர் வகிர்ந்து திருத்திய நுனியொத்த மயிரில் சிவந்த காம்பு பொருந்திய வெட்சிச் சிறுமலர்களை விடுபூவாகத் தூவி, அதனடுவே பசிய தண்டுடைய குவளையின்தூய இதழ்களைக் கிள்ளியிட்டுச், 'ஸ்ரீதேவி' என்னும் தலையாபரணத்துடன் வலம்புரி வடிவமாகச செய்த தலையாபரணத்தையும் தகுந்த இடத்தில் வைத்துப், பொட்டேறிய நறுமணங் கமழும் அழகிய நெற்றியின் கண் சுறுமீனின் அங்காந்த வாய் போலச் செய்த தலையாபரணம் தங்குமாறு அலங்கரிததுச், செய்யவேண்டிய அலஙகாரங்களை முற்ற முடித்த குற்றமற்ற கூந்தலில் பெருத்துக் குளிர்ந்த சண்பகமலரைச செருகிக், கருத்த புறவிதழும் துய்யும் பொருந்திய மருதமலரின் ஒள்ளிய பூங்கொத்துக்களை அதன்மேல் அப்பிப், பசிய தளிரிலிருந்தும மேல் கிளம்புவதாய் அழகுபெற்றுத் தோன்றும் கிழ்நீருடைய சிவந்த அரும்புகளால் ஆகிய மாலையை அக்கூந்தலில் வளையச சுற்றிப் பெரிய காதுகளில் தம்மில் ஒக்கும்படிச் செருகிய அசோகின் ஒள்ளிய தளிரானது நுண்ணிய

தொழிலமைந்த அணிகலேயுடைய மார்பில் அசைய, வலிய வயிரம் பொருந்திய நறுமணச் சந்தனக் குறட்டைத் தேய்த்த அழ கிய நிறக் குழம்பை மணங்கமழும் மருதமலரை அப்பினாற்போலும், கோங்கினது குவிந்த அரும்பு ஒத்த இள முலேகளில் அப்பிப், பூசிய சந்தனக் குழம்பின் ஈரம் உலர்வதன்முன் விரிந்த வேங்கை மலரின் நுண்ணிய பொடியை அவற்றின்மீதப்பி, விளவின் குறுந் தளிரைக் கிள்ளி யழகு விளங்க ஒருவர்மேல் ஒருவர் தெறித்துப் பகைவரை வஞ்சியாது எதிர்நின்று கொல்லும் வலிமையுடைய கோழி வடிவம் மேலே பொருந்திய கொடி, நீடூழி வாழ்க!, என்று துதித்துக் கண்டார்க்குக் காமநோயை உண்டாக்கும் கொடுமை வாய்ந்த தெய்வ மகளிர் பலருஞ் சேர்ந்து சிறப்பு மிகுந்த மலே யிடத்து எல்லாம் எதிரொலி செய்யப் பாடியாடும் சோலேயை யுடைய, மரம் ஏறவல்ல குரங்கும் ஏறியறியாத மர நெருங்கின பக்க மலேயினிடத்து நின்ற வண்டுகளும் மொய்க்காத நெருப்புப் போலும் சிவந்த செங்காந்தள் மலரின் மிகவுங் குளிர்ந்த தலே மாலேயை அணிந்த திருமுடியை யுடையவன்;

உலர்ந்த மயிரினேயும், வரிசை ஒவ்வாத பல்லினேயும், பிளவு பட்ட வாயினேயும், சினத்தால் சுழலும் விழியுடைய பசிய கண் ணினேயும், கண்டாரைத் துன்புறுத்தும் பார்வையினேயும், பிதுங் கிய கண்ணுடைய கோட்டானெடு கொடிய பாம்பு அசைவதால் பருத்த முலேகளே வருத்தும் காதினேயும், சுரசுரப்புடைய உடம் பினேயும், சினம் பொருந்திய நடையினேயு முடைய கண்டார்க்கு அச்சம் உண்டாகும்படி வரும் பெண் பேய் ஆனவள், இரத்தந் தோய்ந்த கூரிய நகங்களேயுடைய வளேந்த விரலால் கண்ணேத் தோண்டி உண்ணப்பட்ட பொல்லாத பிணநாற்றம் வீசும் கருந் தலேயை ஒளிபொருந்திய வளேயல் தங்கிய பெரிய கையில் எந்திக் கொண்டு, அசுரர் அஞ்சும்படி எதிர்நின்று கொல்லும் வெற்றி மிகுந்த போர்க்களத்தினேப் பாடிக், கொழுப்பை உண்ணும் வாயினேயுடையவளாய்த் துணங்கைக் கூத்தாடப், புவியைச் சூழ்ந்த குளிர்ந்த கடல்கலங்கும்படி யுட்புகுந்து சூரபன்மாவாகிய அசுரத்

தலைவனைக் கொன்ற இலைவடிவமான வேற்படையினையும், சூரன் பதுமன் எனும் இரு பெயரினவாய் வடிவினையுடைய ஓர் பெரிய உடலானது அற்று வேறுமாறு அச்சந் தோன்ற நெருங்கிச் சென்று அசுரரின் சிறந்த வெற்றி கெடும்படி கீழே நோக்கிப் பூத்த பூங்கொத்துடைய மாமரத்தை வெட்டிய குற்றமற்ற வெற்றியினையும், ஒருவராலும் இவ்வளவின தென்றளந்தறிய முடியாத புகழினையுமுடைய சிவந்த வேற்படையையுமுடையவன் சுப்பிரமணியன்;

அன்பர், தம் மனத்தை ஐம்புலன்களி னின்றும் பிரித்து மெய்ஞ்ஞான உணர்வுகொண்டு தங்குஞ் சிவந்த திருவடிகளை அடைவதற்கு ஏதுவான புண்ணியங்களைப் பல பிறப்புக்களிலும் விரும்பிச் செய்த கோட்பாட்டினால் பெருமை பெற்ற உள்ளத்துடன் செல்லும் போக்கினை நீ விரும்பினையாயின், நீ முற்பிறப்பிற் கருதிச் செய்த புண்ணியத்தால் வீடு பெறுவார்க் குறுதியெனக் கூறியநற்குணங்கள் பலவும் ஒரு சேரப்பெற்ற நல்ல மனத்துள் எழும்பிய இனிய வீடுபேற்றினைத் தவறாமல் இப்பொழுதே பெறுவாய்;

அச் சற்குருபரனாகிய முருகன், போரை விரும்பிக் கட்டிய மிகவும் உயர்ந்த நீண்ட கொடியருகே நூலினால் வரிந்து புனையப் பெற்ற பந்தும் பாவையும் அறுப்பார் இன்றித் தூங்கியே இருக்கும்படி போர் செய்வாரை அழித்தலினால் என்றும் போர்த் தொழிலையே காணமாட்டாத வாயிலினையும், திருமகள் வருத்தமின்றி வீற்றிருந்த குற்றந் தீர்ந்த கடை வீதிகளையும், மாடங்கள் மிகுந்த ஏனைய வீதிகளையுமுடைய மதுரைக்கு மேற்கே;

அழகிய சிறகினையுடைய அழகிய வண்டினங்கள் கரிய சேறு பொருந்திய அகன்ற கழனியில் கட்டவிழ்ந்து மகரந்தமும் இதழும் தோன்ற மலர்ந்த முள் பொருந்திய காம்பினை யுடைய தாமரை மலரில் இரவு தங்கி யுறங்கிக் காலையில் தேன் கமழ்

நின்ற நெய்தல் மலரை யூதிக் கதிரவன் உதித்த நேரத்தே கண்ணைப்போல் மலர்ந்த ஆவல் பொருந்திய சுனைமலர்களில் சென்று ஆரவாரிக்கும் திருப்பரங்குன்றில் திருவுளம் மகிழ்ந்து எழுந்தருளி யிருத்தலும் உரியன், அதுவன்றி—

## இதன் பொருள்

## 1.—திருப்பரங்குன்றம்

'உலக முவப்ப' என்பது முதல் 'மறுவில்........கணவன்' வரை ஒரு தொடர்.

1. உலகம் உவப்ப - உயிரினங்கள் மகிழுமாறு,

(விருத்தியுரை) உலகம் - நிலம், உயிர், ஒழுக்கம், இங்கு உவப்ப என்றதனால் 'உலகம்' மண்ணுலகத்து வாழும் உயிரினங்களை உணர்த்திற்று. உலகம் என்ப துயர்ந்தோர் மாட்டாதலால் உயர்ந்தோராகிய இருடிகள் விரும்ப என்றும், உயர்ந்தோர் விரும்ப என்றும் உரைப்பர்.

உலகம் என்பது மங்கலமொழிகளுள் ஒன்று. நூற்றொடக்கத்தில் மங்கலமொழி வைப்பது சான்றோர் மரபு. "உலகம் யாவையும்" என்று கம்பர்பிரானும், "உலகெலாம் உணர்ந்து" என்று பெரிய புராண ஆசிரியரும் தொடங்கியுள்ளனர்.

(வலன் ஏர்பு திரிதரு :) ஏர்பு வலன் திரிதரு - எழுந்து மேருகிரியை வலமாகச் சுற்றி வருகின்ற,

(வி - ரை.) ஞாயிறு மேருமலையைக் குறித்து வலம் வருகின்றதென்பது முன்னோர் நூற்கொள்கை. இக்கால விஞ்ஞான நூல்கள் ஞாயிறு அசையாதிருக்கப் பூமி முதல் ஏனைய கிருகங்களே அதைச் சுற்றித் திரிகின்றன என்று கூறுகின்றன. "ஞாயிறு போற்றுதும்...........மேரு வலந் திரிதலான்" எனச் சிலப்பதி

காரம் கூறுவதால் இங்கு ஞாயிறு வலமாக மேருவைக் குறித்துச் சுற்றி வருகின்ற தெனப் பொருள் கொள்ளப்பட்டது. ஆதலின் 'வெற்றியால் எழுந்து திரிகின்ற' என்பது பொருள் அன்று. ஏனெனில் பூமிக்கு நடு மேரு, அங்குத்தான் பரமன் வீற்றிருக்கின்றான்; முருகன் எழுச்சிக்கு ஞாயிற்றின் எழுச்சியை ஆசிரியர் இங்கு ஒப்பிடுகின்றார். இருவர் திரிதலுக்கும் மேரு பொதுவாக இருப்பதை உய்த்துணர்க. 'பூமியை வலமாக' என்றால் ஒருவாறு பொருள் கொள்ளும். மாங்கனி பெறும் நிமித்தம் முருகன் உலகை வலம் வந்ததாக வரலாறுண்டு.

2. பலர் புகழ் ஞாயிறு - பலரும் கொண்டாடுகின்ற சூரியனை,

கடல் கண்டு ஆங்கு - கீழ்க்கடலிடத்தே காணப்பட்டாற் போல,

(வி - ரை.) பலரும் என்பதில் உள்ள முற்றும்மை தொக்கது, கண்டு எனச் செயப்படுபொருள் வினைமுதல் போலக் கூறப்பட்டது. காணப்படு எனற்பாலது செயப்பாட்டு வினைப்பொருளுணர்த்தும் 'படு' விகுதி தொக்குக் கண்டு என நின்றது. இதனை "இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு, நல்லாற்றி னின்ற துணை" எனுந் திருக்குறளில் வரும் 'என்பான்' என்பதற்குப் பரிமேலழகர் "என்பானெனச் செயப்படுவினை முதல்போலக் கூறப்பட்டது" என்று கூறியதையும் அதற்குக் குறிப்பாக "எனப்படுவான் எனற்பாலது செயப்பாட்டு வினைப் பொருளுணர்த்தும், 'படு' விகுதி தொக்கு என்பானென நின்றதெனக்கொண்டார் பிரயோக விவேக நூலாரும், தொல்காப்பிய சூத்திர விருத்திக் காரரும். இவ்வாறு வருவனவற்றை வடநூலார் 'கயக்கு' என்பர்" என்று கூறியதையும் ஆராய்ந்துணர்க. கண்டால் என்னும் வினையெச்சம் கண்டு அல்லது கண்ட எனத்திரிந்து நின்ற எச்சமயக்கம். கண்டு + ஆங்கு = கண்டாங்கு, கண்ட + ஆங்கு = கண்டாங்கு. ஆங்கு-உவமைச் சொல், இது அளபெடுத்துக் கண்டா அங்கு என

கின்றது. பலரும் என்பதற்குப் பல சமயத்தாரும் எனப் பொருள் கூறுதல் அத்துணைச் சிறப்பாகாது; ஏனெனில் ஞாயிறைமட்டும் பல சமயத்தாரும் புகழ்கின்றனர்; முருகக் கடவுளைக் கௌமார சமயிகளும் சைவ சமயத்தினருந்தான் புகழ்கின்றனர். ஆனால் முருகு என்பதற்கு இளமை, மணம், அழகு, தெய்வத்தன்மை என்ற பொருள்கள் உண்டு, அவற்றினை உடையவன் முருகன் அதாவது கடவுள் எனப் பொருள் கொண்டால் அப்போது பலரும் என்பதற்கு எல்லாச் சமயத்தினரும் எனக் கொள்ளலாம்.

சூரியன் இருளைக் கெடுப்பதுபோல் முருகக்கடவுளும் தன்னை மனக்கண்ணால் பார்ப்பவரின் மாயையைக் கெடுக்கின்றனன். தொழில் உவமம். சூரியனைக் கண்ணால் நோக்குவார் சூரியனின் செம்மையும் கடலிற் பசுமையும் காண்பர்; அதுபோல் முருகனைக் கண்ணால் பார்ப்பவரும் முருகனின் செம்மையும் மயிலின் பசுமையும் காண்பர். வண்ண உவமம். கடலில் நீனிறப்புனற்பரப்பில் சூரியனின் பிரதி பிம்பமும், செம்மை ஒளிக்கிரணங்களின் பிம்பமும், புனற்பளிங்கினால் கிரணங்களில் விரவி உள்ள பல வர்ணங்கள் பிரிந்தும் கலந்தும் காணும் அதிசய ஒளியும் காணக் குதூகலமாக இருக்கும். அதுபோலவே முருகக்கடவுளின் சிவந்த வொளியானது பல வர்ணங்கள் கொண்ட பசிய மயிற்பீலிகைகளில் தவழ்ந்து பிரதிபிம்பமாக வெளி வீசும்போது அற்புத ஒளியுடையதாகக் காணப்படும்.

3. (ஓவற இமைக்குஞ் சேண்விளங் கவிரொளி:)

ஓ அற இமைக்கும் அவிர் ஒளி – இந்திரியங்கள் யாவும் தத்தமக்குரிய விடயங்களில்சென்று தங்குதல் இல்லையாமாறு ஊனக் கண்களை மூடி மனக்கண்களாலே பார்க்கப்படும் விளங்குகின்ற பிரகாசத்தையும்,

(வி – ரை.) ஓ, முதனிலைத்தொழிற்பெயர்; ஓரெழுத்தொருமொழி, தங்குதல் என்பது பொருள். இமைத்தல் – கண்ணிதழ்கள்

இரண்டினையும் குவித்தல். இமைக்கும் என்ற காரியம் இங்குக் காரணமாக உபசரிக்கப்பட்டது.

சேண் விளங்கு ஒளி - புறக்கண்களால் நோக்குபவர்களுக்குத் தூரத்தில் பிரகாசிக்கின்ற ஒளியையும்,

'ஒளி' என்பது மத்திம தீபமாக 'ஓ அற இமைக்கும் அவிர்' என்பதற்கும் 'சேண்விளங்கு' என்பதற்கும் பொதுவாகச் சென்றியைந்தது இவ்விதம் அன்வயப்படுத்தாமல் வரியை அங்ஙனமே எடுத்துக்கொண்டு "இடையிடை நீங்குதல் இல்லாமல் பிரகாசிக்கின்ற தூரத்தில் துலங்குகின்ற நாலாப்பக்கங்களிலும் பரப்புகின்ற ஒளியினையும்," என்றாவது "வெகுதூரத்தில் புறப்பட்டு ஒழிவற ஒளிவிட்டு விளங்கிப் பாடஞ்செய்கின்ற அழகிய நிறத்தினையும்" என்றாவது பொருள் கொள்ளலாம். ஈண்டு 'இமைக்கும்' என்பது விட்டு விளங்கும் எனப் பொருள் கொள்ளும்.

இனி, முதல் மூன்று அடிகளிலும் ஞாயிறு, முருகன் இருவருக்கும் உள்ள ஒப்புமை பின் வருமாறு :—

ஞாயிறு எழுவதால் சீவான்மாக்கள் உவக்கின்றன; முருகன் எழுவதால் உலகங்களை அலைத்த சூரபன்மன் முதலானோரை ஒழித்த பேருதவியை நினைந்து வானவரும் இதர சீவான்மாக்களும் உவக்கின்றனர்; ஞாயிறு இயல்பாகவே மேருவை வலமாகத் திரிகின்றனன் என்பது கொள்கை; மேருகிரியில் பரமசிவன் வாசம் செய்வதால் அவனது திருமகனாகிய முருகக்கடவுள் மயில்மிசை அக்கிரியை வலமாகச் சுற்றிவருதல் இயல்பே; ஞாயிறு இருளை யோட்டிச் சீவான்மாக்களுக்கு ஒளி தந்து அவர்களுடைய உயிர்களுக்கு உயிராய்த் திகழ்வதால் அவனைப் பலரும் புகழ்கின்றனர்; முருகனாகிய இறைவனும் சீவான்மாக்களின் அஞ்ஞான இருளைப் போக்கி அவற்றின் உள்ளுயிராகத் திகழ்வதால் அவனைப் பலரும் புகழ்கின்றனர்; கீழ்க்கடலில் ஞாயிறு தோன்றும் போது அவனது செம்மையும் கடலிற் பசுமையும் ஒருங்கே காணப்

படுகின்றன; முருகன் மயிலில் தோன்றும்போது அவனது உடற் செம்மையும் மயிலிற் பசுமையும் ஒருங்கே காணப்படுகின்றன; ஞாயிறு முருகன் இருவரும் இந்திரியங்கள் சென்று தங்குதல் இல்லையாம் ஆறு கண்கள் மூடி மனக் கண்ணால் தரிசிக்குங்கால் விளங்குகின்ற ஒளியினையும், புறக்கண்களாலே பார்க்குங்கால் வெகுதூரத்தில் விளங்குகின்ற ஒளியினையும் உடையவராகின்றனர்.

4. உறுநர்த் தாங்கிய மதன் உடை நோன் தாள் - தன்னை அடுத்தவர்களின் பிறவித்துன்பத்தைநீக்கி அவர்களைக் காத்த, அஞ்ஞானத்தை ஒழிக்கும் வலிமையை யுடைய சீர்பாதத்தையும்,

(வி - ரை.) இங்கு 'மதன்' என்பது மயக்கம், கலக்கம், அறியாமை, அஞ்ஞானம் என்ற பொருள்களில் வந்தது. 'மதன்' என்பதற்கு இன்னும் அழகு, காமன், மாட்சிமை, வளம், வலி என்ற பொருள்களும் உண்டு. ஆதலின் 'மதன் உடை...தாள்' என்பதை 'அழகுடைய தாள்' என்றும், 'காமனும் உடைந்துபோக அத்துணை அழகான தாள்' என்றும், 'பெருமையும் வளமையும் பொருந்திய தாள்' என்றும் கொள்ளினும் பொருள் அமையும். தன்னை வந்து சேர்ந்தார் எத்துணைத் தீமைகள் புரிந்தவராயினும் முருகன் அவர்களைத் தனது திருவடி நிழலில் சேர்த்துக்கொள்ளும் அருளுடையவன் என்பார், 'தாங்கிய மதனுடை நோன்றாள்' என்றார். அடுத்தாரை உடனே தாங்கும் இயல்புடையவன் என்னும் விரைவு நோக்கித் 'தாங்கிய' என்று இறந்த காலத்தான் இயம்பினார்.

5. செறுநர்த் தேய்த்த செல் உறழ் தடம் கை - பகையசுரரை ஒழித்த இடிபோன்ற பெருமை பொருந்திய கரத்தையும் உடைய,

(வி - ரை.) இது கரத்தின் குணம் பிரமாணம் இரண்டையும் குறிக்கின்றது. கரத்திற்குக் குணம், பகைவரை வேற்படையால் தேய்த்தல் (கொல்லுதல், அழித்தல், மற்போரினால் பகை

வரை விசாலமான கையின் சக்தியால் பூமியில் இட்டுத் தேய்த்தல் (உரைத்தல்); இங்ஙனந் தேய்த்தற்குக் கரம் இடிபோன்ற பெருமையை உடையது; வலியுடைய கரத்தின் வீச்சினால் பகைவர் பூமியில் தேய்ப்புண்டு உடல் குறையப் பெறுவர். கரத்தின் பிரமாணம், தடம் (நீட்சி). ஆதலின், தடக்கை, பெருமைக் குணமும் விசாலமும் பொருந்திய கரம் என்க.

'செல்' என்பது இரட்டுறமொழியாக் மேகம் என்றுங் கொள்ளலாம். எனின் பகைவர் என்னும் நெருப்பை அழிக்கும் மேகம் போன்ற தடக்கை என்றும், பகைவரை அழித்த மேகத்தின் செய்தியை ஒத்த-தடக்கை என்றுங் கொள்க.

மேகத்தின் செய்தியாவது அன்பர்க்கு வேண்டிய வேண்டியாங்கு வரையாது கைம்மாறு கருதாது வழங்கும் வள்ளல் தன்மை. இது தொழில் உவமம்.

உறழ், உவமஉருபு; 'உறழ்வு' எனும் தொழிற்பெயர் அடியாகப் பிறந்த பெயரெச்சமாக 'உறழ்' என்பதாகக் கொண்டால் மாறுபட்ட என்னும் பொருள் கொள்ளும்.

'உடுநர்த் தாங்கிய,' 'செறுநர்த் தேய்த்த' என்றதனால் காத்தல் தொழிலையும், அழித்தல் தொழிலையும் உடன் கூறினர், அன்பரைப் பாதுகாத்தலும், கொடியவரை அழித்தலும் தலைவருக்குக் கடமையாதலான்.

6. மறு இல் கற்பின் வாள் நுதல் கணவன் - குற்ற மற்ற கற்பும் ஒளி பொருந்திய நெற்றியும் உடைய தெய்வயானையாரின் கணவன்,

(வி - ரை.) கற்பு - பெண்மையைப் பாதுகாப்பதின் நிமித்தம் ஒருவள் தனது சித்தத்தில் கற்பித்துக் கொள்ளும் ஓர் உறுதி. நாயகனிற் சிறந்த தெய்வம் இல்லை என்று ஒழுகி நாயகன் கற்பித்த வழி நிற்றலுக்கும் கற்பு என்றும் கூறுவர்.

மறுவில் கற்பு - மறக் கற்பில்லாத அறக்கற்பு. மறக்கற்பு, சீறிய கற்பு, கொடுங்கற்பு எனினும் ஒன்றே.

அறக் கற்பு, ஆறிய கற்பு, அருள் கற்பு எனினும் ஒன்றே.

வாள்நுதல் என்பது வாள் (ஒளி) ஆகிய நுதலை உடையவள் என விரிவதால் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப் பெயர். இங்குத் தெய்வயானையைக் குறிக்கும். தெய்வயானை முருகனுக்குக் கிரியா சக்தி யென்பர். உறுநர்த் தாங்குதல் செறுநர்த் தேய்த்தல் என்ற வினைகளுக்குக் கிரியாசக்தி அவசியமானதால் ஈண்டுத் தெய்வயானையைக் குறித்தார்.

ஒளியையும் பாதத்தையும் கரத்தையும் உடைய கணவன் என முடிக்க.

'கார்கோள்' முதல் 'மார்பினன்' வரை ஒரு தொடர்.

7. 'கார்கோள் முகந்த கமஞ்சூல் மா மழை - கடலில் முகந்து முதிர்ந்த கருவினையுடைய பெரிய மேகங்கள்.

(வி - ரை.) காரினால் முகக்கப்படுவதால் கடல் கார்கோள் எனப் பேர்பெற்றது, ஆகுபெயர்; கோள், முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

மாமழை, கரிய மேகங்கள் எனவும் பொருள்படும்.

8. வாள் போழ் விசும்பின் வள் உறை சிதறி - சூரியனும் சந்திரனும் இருளை நீக்குகின்ற ஆகாயத்தினிடத்தில் வளப்பத்தை யுடைய துளிகளைத் தூவி,

(வி - ரை.) வாள், ஒளி, அதனையுடைய சந்திர சூரியர்களுக்கு ஆனதால் ஆகுபெயர்.

வள் உறை, பெரிய துளிகள் எனவும் உரைக்கலாம். துளிக்கு வளப்பமாவது நெருக்கமும் பெருமையும் ஆகும்.

வாள் போழ் விசும்பின், 'சூரிய சந்திரர்களால் அளவிடப் பட்டாற் போன்ற ஆகாயத்தினிடத்தில்' என்பாரு முளர்.

9. தலைப்பெயல் தலைஇய தண் நறு கானத்து - கார்காலத் தில் முதற்பெய்த மழை பெய்துவிட்ட குளிர்ந்த நறுமணமுடைய காட்டினிடத்து,

(வி - ரை.) தலைப்பெயல், மழைபெய்து நிற்றல்; தலைஇய என் பதற்குத் தழைத்த என்பாருமுளர்.

10. இருள்படப் பொதுளிய பாரரை மராஅத்து - இரு ளுண்டாகத்தழைத்த பருத்த அடிப்பாகத்தினையுடையகடம்பினது

(வி - ரை.) பாரரை, பருவரையின் மரூஉ. மராஅத்து 'அத்து' ச் சாரியை கொண்டது 'இன்' உருபு தொக்கது.

மராம் - கடம்பு, இங்குச் சிலர் வெண்கடம்பென்றும், சிலர் செங்கடம்பென்றுங் கூறுவர்.

பொதுளிய, நெருங்கிய எனினுமாம்.

11. உருள் பூ தண் தார் புரளும் மார்பினன் - தேருருள் போன்ற வட்டப்பூவினால் ஆகிய குளிர்ந்த மாலையானது அசையப் பெற்ற மார்பினை யுடையவனும்,

(வி - ரை.) உருள்பூ, உவமைத்தொகை, ஆதலின் உருள்பூ வென்றும், உருட்பூ வென்றும், உறழ்ச்சி முடிபெய்துகின்றது வினைத்தொகையாகவும் கொள்ளலாம்; எனில் உருண்டபூ எனப் பொருள்படும். இம்மாலை போகத்திற்குரியது.

'மால்வரை' முதல் 'சென்னியன்' வரை ஒரு தொடர்.

12. மால் வரை நிவந்த சேண் உயர் வெற்பில் - பெரிய மூங்கில் வளர்ந்துள்ள ஆகாயத்தின் ஓங்கிய மலையில்,

(வி - ரை.) வரை, கணு, அதனையுடைய மூங்கிலுக்கு ஆன தால் ஆகுபெயர்.

'வரை' என்பதனைச் சிகரமாகக்கொண்டு "மால்வரை ......" என்பதற்குத் திருமால் போலும் சிகரங்கள் ஓங்கியுள்ள மலை என்றும் கொள்ளலாம். சேண் உயர், மிகவும் உயர்ந்த என்றும் உரைக்கலாம்.

13. கிண்கிணி கவைஇய ஒள் செஞ்சீறடி - சிறு சதங்கை சூழ்ந்த ஒளிபொருந்திய சிவந்த சிறிய அடியினையும்,

(வி - ரை.) இனி, சிறு சதங்கைகளினால் கட்டப்பட்டு அழகும் சிறப்பும் பொருந்திய சிறிய அடி எனினும் பொருந்தும்.

14. கணைக் கால் வாங்கிய நுசுப்பின் பணை தோள்-திரண்ட காலினையும் துவளும் இடையினையும் மூங்கில் போலும் தோளினையும்,

(வி - ரை.) பணை தோள், பெரிய தோள் என்று கொள்ளினும் அமையும்.

15. கோபத்து அன்ன தோயா பூ துகில் - இந்திரகோபப் பூச்சிப் போலும் சாயம் பிடியாத தன்னியல்புடைய சிவந்த அழகிய புடைவையினையும்,

(வி - ரை.) கோபம் என்பது இந்திரகோபத்தின் முதற் குறைந்த விகாரம். தோயாப்பூந்துகில், தெய்வமகளிரின் புடைவைகள் தெய்வத்தன்மையால் வர்ணம் பிடியாமலேயே இயற்கைச் செம்மை யுடையனவாம்.

பூந்துகில் - மெல்லிய துகில், பூத்தொழில் உடைய துகில், சித்திர வேலைப்பாடுடைய துகில் என்றுங் கொள்ளலாம்.

16. பல் காசு நிரைத்த சில் காழ் அல்குல் - பல மணிகள் வரிசையாகக் கோர்க்கப்பெற்ற சில வடங்களை அணிந்த நிதம்பத்தினையும்,

(வி - ரை.) சில்காழ், சில வடங்கள்; இங்குக் காஞ்சி யென்றேனும் மேகலை யென்றேனும் கொள்க. காஞ்சி எண்கோவை மேகலை எழுகோவை. இவை அல்குலுக்கு மேலே அடிவயிற்றில் புடைவைக்குள்ளே அணியும் ஆபரணமாகும்.

காஞ்சி இருகோவை, மேகலை எண்கோவை என்றும் உரைப்பர்.

17. கை புனைந்து இயற்றா கவின் பெறு வனப்பின் - ஒருவர் கையினாலும் சிறப்பித்து அலங்கரிக்கப்பெறாத அழகினைத் தமக்கு இயற்கையாகப் பெறுகின்ற அழகினையும்,

(வி - ரை.) மானிட மகளிர் தோழியர் அலங்கரித்தலால் செயற்கை அழகு பெறுவர்; தெய்வ மகளிரோவெனில் அங்ஙனமில்லாது இயல்பாகவே அழகுடையவர் என்பதாம்.

வனப்பு, இளமை நிறம் என்றும் உரைப்பர்.

18. நாவலொடு பெயரிய பொலம் புனை அவிர் இழை-சாம்பூநதம் எனப் பெயர்பெற்ற பொன்னாற் செய்யப்பட்டு விளங்குகின்ற பூணினையும்,

(வி - ரை.) சாம்பூநதம், சாதரூபம், ஆடகம், கிளிச்சிறை என்ற நான்கு வகைப் பொன்களில் சாம்பூநதமே சிறந்தது. 'பொன்னுக்குச் சாம்பூநதம்' என்று திருவள்ளுவமாலை யுரைத்தலை நோக்குக. 'பொன்' என்னும் சொல் பொலம் எனத் திரிந்தது; பின்னர் அது பொன்னின் பரியாய மொழிகளில் ஒன்றெனக்கொண்டு நிகண்டு முதலியவற்றிலும் சேர்த்தனர்.

சம்புநதியிற் பிறத்தலால் சாம்பூநதம் எனப் பேர் பெறும்.

'நாவற்பழத்துச் சாறு பட்டுப் பேதமான' பொன் என்றும் உரைப்பர்.

19. சேண் இகந்து விளங்கும் செயிர் தீர் மேனி - நெடுந் தூரத்தைக் கடந்து விளங்குகின்ற குற்றம் நீங்கிய உடல் நிறத்தினையும் உடைய சூரரமகளிர் (41-வரி),

20. துணையோர் ஆய்ந்த இணை ஈர் ஓதி - தோழிமார் வகிர்ந்து திருத்திய நுனிகள் ஒத்த குளிர்ந்த மயிரில்,

(வி - ரை.) தோழிமார் நலமென்று ஆராய்ந்த நுனி யொத்த நெய்ப்புடைய என்று கூறினும் பொருந்தும்.

21-22. (செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு, பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளி:) செங்கால் வெட்சி சிறு இதழ் இடை பைந்தாள் குவளை தூ இதழ் கிள்ளி இடுபு - சிவந்த காம்புடைய வெட்சியின் சிறு பூக்களை விடுபூவாகச் சிதறி அதன் மத்தியில் பசிய தண்டுடைய குவளையின் தூய இதழ்களைக் கிள்ளி யிட்டு,

(வி - ரை.) சீறிதழ் இடை இடுபு என்றே வைத்துக்கொண்டு சிறிய இதழ்களை இடையிட்டு எனினும் அமையும்.

சிறுமை + இதழ் = சீறிதழ், நிலைமொழியீற்று மைகெட்டு முதல் நீண்டது.

விடுபூ, தொடைப்பூ, கட்டுப்பூ என பூக்கள் மூன்றனுள் இங்கு விடுபூ என்பது கட்டாத பூவென்க.

23. தெய்வவுத்தியொடு வலம்புரி வயின் வைத்து - சீதேவி என்னும் தலைக்கோலத்துடனே வலம்புரி உருவமாகச் செய்த தலைக்கோலத்தையும் தகுந்த இடத்தில் வைத்து,

(வி - ரை.) இதற்குச் சீதேவி யென்னும் தலையாபரணத்துடனே நந்தியாவட்டமலரை இடையிடையே செருகி என்றும், 'வலம்புரி வயின் தெய்வவுத்தியொடு வைத்து' என்று அன்வயப் படுத்திச் சங்கீன்ற முத்துமாலை அணிந்த இடத்தில் சீதேவி என்னும் தலையாபரணத்தையும் தரித்து என்றும் பொருளுரைப்பர்.

24-25. திலகம் தைஇய தேம் கமழ் திருநுதல் மகரப்பகு வாய் தாழ மண்ணுறுத்து - பொட்டு ஊன்றிய நறுமணம் கமழ் கின்ற அழகிய நெற்றியின்கண் சுறுமீனினது அங்காந்தவாய் போலச் செய்யப்பட்ட தலைக்கோலம் தங்குமாறு அலங்கரித்து,

(வி - ரை.) தைஇய, அழகு செய்த என்பாருமுளர். இட்ட எனினும் அமையும். மகரப்பகுவாய், சுறுவின் அங்காந்த வாய்; அதைப் போன்ற தலைக்கோலத்திற்கானதால் உவமவாகுபெயர். அன்றேல் உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர் என்று கொள்ளினும் அமையும். அங் காத்தல் - கொட்டாவி விடுதல், வாய் திறத்தல்.

தாழ மண்ணுறுத்தி, தொங்கும்படி விளக்குறுத்தி என் பாரும் உளர்.

மண்ணுறுத்தித் துவர முடித்த என்று மேலே கூட்டிக் கழுவி முடித்த என்றுங் கூறலாம். மண்ணுதல் - கழுவுதல்.

26-27. துவர முடித்த துகள் அறும் முச்சிபெரு தண் சண்பகம் செரீஇ - செய்ய வேண்டிய அலங்காரங்களை முற்ற முடித்த குற்றமற்ற கூந்தலில் பெருத்துக் குளிர்ந்த சண்பகப் பூவினைச் செருகி,

(வி - ரை.) மயிர் முடிக்குத் துகள் ஆவன :—புழுதி, சிம்பு (சிக்கல்). 'உச்சி' என்றும் பிரிக்கலாம். துவர முடித்த, பெருக முடித்த என்றும் உரைப்பர்.

27-28. கருந்தகடு உளை பூ மருதின் ஒள் இணர் அட்டி - கருத்த புறவிதழ்களையும் மேற்பாகத்தில் துய்யினையும் உடைய மலர்களை யுடைய மருதின் ஒளி பொருந்திய பூங்கொத்துகளை அதன்மேல் அப்பி,

(வி - ரை.) 'கருந்தகட் டுளைப்பூ' என்பது மருதத்திற்குரிய இயற்கை யடைமொழி. உளை, மருதமலரின் மீதுள்ள பஞ்சு

நுனி போன்ற அல்லது மென்மயிர் நுனி போன்ற மிகநுட்பமான பொருள். 'கருந்தகடு' என்பதைப் புறவிதழ் என்று பொருள் உரைத்தற்கியைய 'உளை' என்பதை 'உள்' 'ஐ' எனப்பிரித்து 'இதழ்' என்பதைக் கூட்ட, அகத்தே அழகிய இதழ்களையும் என்றும் பொருளுரைப்பர். இதற்கு விரிந்தபூ என்றும் உரைப்பர்.

29-30. கிளை கவின்று எழுதரு கீழ்நீர் செவ்வரும்பு இணைப்பு உறு பிணையல் வளைஇ - பசிய தளிரிலிருந்தும் மேலே கிளம்புகின்றதாய் அழகு பெற்றுத் தோன்றுகின்ற கீழே நீரை யுடைய சிவந்த அரும்புகளைக் கொண்டு கட்டுதல் பொருந்திய மாலையை அக் கூந்தலில் வளையச் சுற்றி,

(வி - ரை.) கிளை கவின்று எழுதரு கீழ்நீர் செவ்வரும்பு, என்பதற்கு, தளிர் மரக்கிளையை நெருங்கிக் கிளம்புகின்ற நீரின் கீழ் நிற்கும் சிவந்த அரும்பு என்று கொள்ளினும் அமையும்.

கவின்று என்னும் தொழில் கவின் என்னும் பண்பினடி யாகப் பிறந்தது. நீர்க்கீழ், இலக்கணம் உடையது; கீழ்நீர், இலக்கணப்போலி. மிகவும் சிவந்திருப்பதால் இதனை அலங் காரத்திற்குப் பயன்படுத்துவர்.

30-32. (துணைத்தக, வண்காது நிறைந்த பிண்டி யொண் டளிர், நுண்பூ ணாகந் திளைப்ப:) வள் காது துணைத்தக நிறைந்த பிண்டி ஒள் தளிர் நுண்பூண் ஆகம் திளைப்ப - பெரிய காதுகளில் தம்மில் ஒக்குமாறு செருகப்பெற்ற அசோகினது ஒளி பொருந் திய தளிரானது ஆபரணத்தை யுடைய மார்பில் அசைய,

(வி - ரை.) வள்காது, அழகிய காது எனினும் அமையும்.

32-35 திண் காழ் நறு குறடு உறுஞ்சிய பூ கேழ் தேய்வை தே கமழ் மருது இணர் கடுப்ப கோங்கின் குவி முகிழ் இளமுலை கொட்டி - வலிய வயிரமுடைய நறுநாற்றங் கொண்ட சந்தனக் குறட்டைத் தேய்த்த அழகிய நிறம் பொருந்திய குழம்பை மணங்

கமழ்கின்ற மருதப்பூவை அப்பினாற் போலும், கோங்கினது குவிந்த அரும்பை நிகர்த்த இளமுலைகளில் அப்பி,

(வி - ரை.) திண் காழ் செறிந்த வயிரம் என்றும் கூறுவர்.

மருது இணர் கடுப்ப, மருதம்பூங்கொத்தை யொத்த சந்தனக்குழம்பை எனினும் அமையும்.

மருதம்பூவின் நிறத்தைப்போல் சந்தனக்குழம்பு இருத்தலின், மருதம்பூ நிறத்திற்கு உவமையாக எடுத்துக்கொள்ளப்பட்டது.

35-36. விரி மலர் வேங்கை நுண் தாது அப்பி - அப்பிய சந்தனக் குழம்பின் ஈரம் உலர்வதற்குமுன் விரிந்த மலர்களை யுடைய வேங்கைப்பூவின் நுண்ணிய மகரந்தப்பொடியை அவற்றின்மீ தப்பி,

36-37. (காண்வர, வெள்ளிற் குறுமுறி கிள்ளுபுதெறியா:) வெள்ளில் குறுமுறி கிள்ளுபு காண்வர தெறியா - விளாவினது சிறிய தளிரைக் கிள்ளி அழகு பொருந்த ஒருவர்மேல் ஒருவர் தெறித்து,

(வி - ரை.) தளிரைக் கிள்ளி அம் முலைகளின்மீது தெறித்து எனவும், முருகக்கடவுளின் திருவடிகளை உள்ளித் தெறிந்து எனவும் பொருள் கொள்வர்.

38-39. (கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி வாழிய பெரிதென் றேத்தி:) வென்று அடு விறல் கோழி ஓங்கிய கொடி பெரிது வாழிய என்று ஏத்தி - பகைவரை வஞ்சியாது எதிர்நின்று கொல்லும் வலிமையுடைய கோழி வடிவம் மேலே பொருந்திய கொடி நீடூழி வாழ்க என்று துதித்து,

(வி - ரை.) ‘வேன்று’ என்பது பாடமாயின் அன்வயிக்கும்போது, ‘என்று’ என்று நிற்கும்; ஆயின், பட்டக்கால் பகைவரை வஞ்சியாது ..........,எனக் கொள்க.

39-41. (பலருடன், சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்) சூரர மகளி ராடுஞ் சோலை:) சூர் அரமகளிர் பலருடன் சீர் திகழ் சிலம்புஅகம் சிலம்ப பாடி ஆடும் சோலை - கண்டார்க்கு ஆசை நோயை உண்டாக்கும் கொடுமையையுடைய தெய்வ மங்கையர் பலருஞ் சேர்ந்து சிறப்பு மிகுந்த மலையிடத்தெல்லாம் எதிரொலி செய்யப் பாடியாடும் சோலையை யுடைய,

(வி - ரை.) சூர் அரமகளிர், கண்டார்க்கு அச்சந்தருகின்ற தெய்வமகளிர் என்றும், தெய்வமடவார் என்றும் கூறுவர்.

சூர் - அச்சம், துன்பம், தெய்வப்பெண், தெய்வம், நோய். 'பலவுடன்' என்ற பாடம் கொண்டு பல தோத்திரங்களினாலே அழகுபட்டு விளங்கிய மலையிடம் என்றுங் கூறுவர்.

42. மந்தியும் அறியா மரன் பயில் அடுக்கத்து - மரம் ஏற வல்ல குரங்கும் மரம் நீட்சியால் ஏறி யறியாத மரங்கள் அடர்ந்த பக்கமலையினிடத்து நின்ற,

(வி - ரை.) மந்தியை அருக்கன் என்றுங் கூறுவர். மந்தியும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு. மரன் - ஈற்றுப்போலி, மரம். மரம் என்றும் பாடமோதுவர்.

43-44. சுரும்பும் மூசா சுடர் பூ காந்தள் பெரு தண் கண்ணி மிலைந்த சென்னியன் - வண்டுகளும் மொய்க்காத நெருப்புப்போலும் சிவந்த பூக்களையுடைய செங்காந்தளின் மிகவுங் குளிர்ந்த தலைமாலையை அணிந்த திருமுடியை யுடையவன்,

கண்ணி, சூடும்பூ வென்றுங் கொள்வர். முருகப்பிரானுக்கே உரிய அடையாளப்பூ வாகும்.

அடியையும், காலையும், நுசுப்பையும், தோளையும், துகிலையும், அல்குலையும், வனப்பையும், இழையையும், மேனியையும் உடைய சூரரமகளிர் பலருங் கூடி இடையிட்டு வைத்துப் பண்ணிச் செரீஇ இணரட்டி வளைஇத் திளையா நிற்கக் கொட்டி அப்பித்

தெறித்து எத்திப் பாடியாடுஞ் சோலையினை யுடைய வெற்படுக்கத் துக் கண்ணி யிலேந்த சென்னியன் என முடிக்க.

'பார்' முதல் 'சேய்' வரை ஒரு தொடர்.

45. பார் முதிர் பனி கடல் கலங்க உள் புக்கு - புவியினைச் சூழ்ந்த குளிர்ந்த கடலானது கலங்குமாறு உள்ளே புகுந்து,

(வி - ரை.) பாறைநிலம் முற்றுப்பெற்ற குளிர்ச்சியையுடைய கடல் என்றும், மண்ணிடத்தே முதிர்ந்த கடலென்றும் கூறுவர்.

46. சூர் முதல் தடிந்த சுடர் இலை நெடு வேல் - சூரபன்மனு கிய அசுரத் தலைவனைக் கொன்ற ஒளிபொருந்திய இலை வடிவமான நீண்ட வேலால்,

(வி - ரை.) முதல் தடித்த, முதலோடும் தொலைத்த என்ற பொருளும் உண்டு; இங்கு, முதல் - சுற்றம். இலை அகன்ற என் பாரும் உளர்.

47. உலறிய கதுப்பின் - உலர்ந்த மயிரினையும்,

பிறழ் பல் - வரிசை ஒவ்வாத பல்லினையும்,

(வி - ரை.) ஒளி பொருந்திய பல்லினையும் என்றும், வெளித் தோன்றிய பல்லினையும் என்றுங் கொள்க. பிறழ்தல் - ஒளி செய் தல், வேறுதல்.

பேழ்வாய் - பிளவுப்பட்ட வாயினையும்,

(வி - ரை.) பெரிய வாயினையும் எனினும் அமையும்.

48. சுழல் விழி பசு கண் - சினத்தால் சுழலுகின்ற விழி கொண்ட பசுமையான கண்ணினையும்,

சூர்த்த நோக்கின் - கண்டாரைத் துன்புறுத்தும் பார்வை யினையும்,

(வி - ரை.) சூர்த்தநோக்கு என ஒரே வார்த்தையாகக் கொண்டு கொடுமையினையும் எனினும் அமையும்.

சூர்த்தம் நோக்கின், நடுங்கிய பார்வையினையும் என்றுங் கூறுவர்.

49-50. கழல் கண் கூகையொடு கடு பாம்பு தூங்க பெரு முலை அலைக்கும் காதின் - பிதுங்கிய கண்ணுடைய கோட்டானொடு கடுமையான பாம்பு அசைவதால் பருத்தமுலைகளை வருத்தும் காதினையும்,

(வி - ரை.) கழல்கண், கழன்று விழுவது போலுங் கண் என்றும் உரைப்பர். கடும்பாம்பு, சினத்தையுடைய பாம்பு எனினும் பொருந்தும். தூங்க, தொங்க எனினும் அமையும்.

பிணர் மோட்டு - சுரசுரப்புடைய பெரிய உடம்பினையும்,

(வி - ரை.) மோடு, வயிறு எனினும் அமையும்.

51. உரு கெழு செலவின் - சினம் பொருந்திய நடையினையு முடைய,

(வி - ரை.) இருளுருப் பொருந்திய என்றுங் கண்டார் உட்கு தல் பொருந்திய என்றுங் கூறுவர்.

அஞ்சுவரு பேய்மகள் - கண்டார்க்கு அச்சம் உண்டாகுமாறு வருகின்ற பெண்பேய்,

(வி - ரை.) இவ்வடிக்கு பனையுயரம் போன்றும் உயர்ச்சி பொருந்திய உருவமுள்ள அஞ்சத் தகுந்த பெண்பேய் என்று உரைப்பாரும் உளர்.

52-53. குருதி ஆடிய கூர் உகிர் கொடு விரல் கண் தொட்டு உண்ட கழிமுடை கரு தலை - இரத்தந்தோய்ந்த கூரிய நகங்களையுடைய வளைந்த விரலால் கண்களைத் தோண்டி உண்ணப்பட்ட பொல்லாத பிணநாற்றத்தை யுடைய கருத்த தலையை

(வி - ரை.) தொட்டு வினையெச்சமாகாது தொழிற்பெய ராகுல், கண்களைத் தோண்டுதல் உடைய என்று பொரு

ளாகும், கொடு கோடிய எனினும் அமையும். கருந்தலை, பசுந் தலை என்பாரும் உளர்.

54. ஒள் தொடி தடம் கையின் ஏந்தி - ஒளிபொருந்திய வளையலை யுடைய பெரிய கையிலே ஏந்திக்கொண்டு,

(வி - ரை.) ஒள், அழகிய எனினும் அமையும்.

54-55. வெரு வர வென்று அடு விறற்களம்பாடி - அசுரர் அஞ்சுமாறு வஞ்சியாமல் எதிர்நின்று கொல்கின்ற வெற்றி மிகுந்த களத்தினைப் பாடி,

தோள் பெயரா - தோளை யசைத்து,

56. நிணம் தின் வாயள் - கொழுப்பைத் தின்ற வாயினை யுடையளாய்,

(வி - ரை.) வாயள், குறிப்புவினை முற்றெச்சம்.

துணங்கை தூங்க - துணங்கைக் கூத்தாட,

(வி - ரை.) 'பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத் துடக் கிய நடையது துணங்கையாகும்.' சிங்கிக்கூத் தென்பாரும் உளர்.

கதுப்பினையும், பேழ்வாயினையும், பசுங்கண்ணினையும், நோக் கினையும், காதினையும், மோட்டினையும், செலவினையும், உடைய பேய்மகள் தலையை யேந்தி வாயினை யுடையவளாய்ப் பாடித் துணங்கை தூங்க வென முடிக்க.

57. இரு பேர் உருவின் ஒரு பேர் யாக்கை - சூரன், பது மன் என்ற இரண்டு பெயர்களை யுடைய வடிவினை யுடைய ஓர் பெரிய உடலானது,

(வி - ரை.) சூரன் பதுமன் என்னும் இருவர்தான் சுப்பிர மணியனின் சாபத்தினால் ஓர் உருக்கொண்டு உதித்தனர் என் பர். அவனைக் கொல்லவே சிவபெருமானுக்கு நெற்றிக் கண் ணில் உதித்தருளினன். பின்னர், சாபம் கொடுத்த போது

பிரதம சிருட்டியில் சிவபெருமானின் இருதயத்தில் தோன்றியவ ஞவான். இவ்வடிக்கு மனித வடிவும், விலங்கு வடிவுமாகிய இரு பெரிய வடிவினையுடைய ஒன்ருகிய பெரிய உடல் என்று கொள் ளினும் அமையும். குதிரை முகமும், மக்களுடலுங் கொண்ட சூரபன்மன் எனக் கொள்க.

58. அறு வேறு வகையின் அஞ்சுவர மண்டி - அற்று வேறு வேருமாறு அச்சந் தோன்ற நெருங்கிச் சென்று,

(வி - ரை.) 'அறு' என்ற வினை அற்று என்றெச்சமாகியது. இதற்கு ஆருகிய வேறுபட்ட கூற்ருல் அச்சந் தோன்ற மிக்குச் சென்று என்பாரும் உளர்.

சிவபெருமான் கருப்பத்தை இந்திரன் கையிற் கொடுக்க இருடிகள் இறைவனின் நெற்றிக்கண் பெய்து மனைவியர் கையில் கொடுக்க அருந்ததி தவிர்த்துக் கார்த்திகை முதலிய அறுவரும் வாங்கி விழுங்கிக் கரு முதிர்ந்து சரவணப் பொய்கையில் பயந் தனர் ஆக, ஆறு கூருக வளர்கின்ற போது இந்திரன் ஆண்டு வந்து மறதியாக வச்சிரத்தான் அவற்றை எறிய ஆறு வடிவங் களும் ஓர் வடிவமாகி இந்திரனேடு போர் செய்து அவனை வலி யழித்துப் பின்னர் சூரபன்மனைக் கொல்லுதற்கு அவ்வடிவம் ஆருகிய வேறுவகையான கூற்றிஞல் நெருங்கிச் சென்றதென்பது புராணம்.

இனி அறு வேறு வகையின் அஞ்சுவர மண்டி என்பதற்குச் சூரபன்மாவின் மூலப்படை, கூலிப்படை, காட்டுப்படை, துணைப் படை, பகைப்படை, நாட்டுப்படை என்ற அறுவகைப்படையும் அஞ்சுமாறு மேற்சென்று என்றும் ஒரு சாரார் பொருள் கூறுவர்.

59. அவுணர் நல் வலம் அடங்க - அசுரரின் சிறந்த வெற்றி கெடுமாறு,

59-60. கவிழ் இணர் மா முதல் தடிந்த - கீழே நோக்கின பூங்கொத்துக்களை யுடைய மாமரத்தை வெட்டிய,

(வி - ரை.) அசுரரை எதிர்த்து நின்றவரின் வலியில் பாதி தமது வலியில் சேர மந்திரஞ் சாதித்து நின்றதொரு மாமரத்தை வெட்டிய என்பதாம். இனி இதற்கு மாயையிலே கீழ்நோக்கிப் பூத்த மாவாய் நிற்கும் சூரபதுமனை முதலோடே தடிந்த என்று கூறுவாருமுளர்.

மறு இல் கொற்றத்து - குற்றமற்ற வெற்றியினையும்,

(வி - ரை.) வெற்றிக்குக் குற்றமாவது:—மறதியுடைய பகைவனைக் கொன்று பெறுதல், நிராயுதனுடன் பொருது பெறுதல், தன்னின் மெலியாருடன் பொருது வெல்லுதல், வஞ்சித்து வலைப் படுத்திப் பெறுதல் முதலியனவாம்.

61. எய்யா நல் இசை - ஒருவராலும் இவ்வளவின தென்றளந்தறிய முடியாத சிறந்த புகழினையுமுடைய,

(வி - ரை.) ஒருவராலும் அடைய முடியாத சிறந்த புகழ் என்றும், இளையாத நல்ல கீர்த்தி என்றும் சொல்லுவர்.

செவேல் சே எய் - சிவந்த வேற்படையை யுடைய சுப்பிரமணியன்,

(வி - ரை.) சேய் என்பது முருகக் கடவுளின் பெயர்களுள் ஒன்று; இன்றேல் சிவபெருமானின் குழந்தை யென்றும், என்றும் மாறாத இளமையுடையவன் என்றும், செய்யவன் என்பது சேய் என மருவிற்றென்று கொண்டு சிவந்தவன் என்றுங் கொள்ளினும் அமையும். பகைவரோடு இடையறாது பொருதலால் அவர் இரத்தம் உலராது வேல் சிவந்திருத்தலின் செவ்வேல் என்றார்.

கடல் கலங்க உள்புக்குச் சூர் முதலின் ஒரு பேரியாக்கை அறுவேறு வகையின் அஞ்சு வர மண்டிப் பேய்மகள் பாடித் துணங்கை தூங்க அந்தச் சூர்முதல் தடிந்த வேலானே மீண்டும் அவுணர் வலியடங்க மாமுதல் தடிந்த கொற்றமும் இசையுமுடைய சேய் என முடிக்க.

62-63. (சேவடி படருஞ் செம்மலுள்ளமொடு, நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையும் :)

புலம் பிரிந்து உறையும் அடி - தம்மனத்தை ஐம்புலன்களினின்றும் பிரித்து மெய்ஞ்ஞான உணர்வுகொண்டு அன்பர் தங்குந் திருவடி.

(வி - ரை.) திருவடியே வீடென்றார்.

புலம், சாதியொருமை; ஊறு, ஒளி, ஓசை, சுவை, நாற்றம். புலம் புரிந்து என்று பாடம் ஓதிப் புலம் புரிந்து உறையும் செலவு என்று அன்வயப்படுத்தி மெய்ஞ்ஞானத்தைச் சாதித்துத் திருவடிக் கீழ் இருக்கும் நெறியை என்று கூறினும் அமையும். ஈண்டுப் புலம் என்பதற்கு (அறிவு) மெய்ஞ்ஞானம் என்று பொருள்படும். புலம், தேசமாயின், புலம் பிரிந்து உறையும் செலவு, தேசத்தை விட்டு வேற்றுத் தேசத்தில் தங்கும் போக்கை என்றும், புலம் புரிந்து உறையும் செலவு என்று ஓதி வேற்றுத் தேசத்தை விரும்பித் தங்கும் செய்கையை என்றும் கூறுவர்.

சேவடி படரும் நலம் புரி கொள்கை செம்மல் உள்ளமொடு - அந்தச் சிவந்த திருவடிகளை அடைவதற்கு ஏதுவான புண்ணியங்களைப் பல பிறப்புக்களிலும் விரும்பிச் செய்த கோட்பாட்டினால் பெருமைபெற்ற உள்ளத்துடன்,

நலம்புரி, நன்மை மிக்க என்பாரும் உளர்.

64. செலவு நீ நயந்தனை ஆயின் - செல்லும் போக்கினை நீ விரும்பினையாயின்,

64-66. (பலவுட, னன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப, வின்னே பெறுதிநீ முன்னிய வினையே:) நீ முன்னிய வினை பலவுடன் நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப இன்னே பெறுதி நீ முற்பிறப்பில் கருதிச் செய்த புண்ணியத்தாலே வீடு பெறுவார்க்குறுதி யெனக் கூறப்பட்ட பல நற்குணங்கள் ஒருங்கே சேரப்

பெற்ற நல்ல மனத்துள் எழும்பிய இனிய வீடுபேற்றினைத் தவறாமல் இப்பொழுதே பெறுவாய்,

(வி - ரை.) பல உடல் எனப் பிரித்து நிலைபேறில்லாத இன்பங்கள் பலவற்றையும் சினந்து என்றுங் கொள்வர்.

பலவுடன் நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப நீ முன்னிய வினை இன்னே பெறுதி என்று அன்வயப்படுத்திப் பல நற்குணங்கள் சேரப்பெற்ற நல்ல நெஞ்சத்தில் உண்டான இனிய விருப்பம் கைகூடும்படி நீ நினைத்த செயலை (வீடுபேறுட்பட) இப்பொழுதே பெறுவாய் என்றும் உரைப்பர்.

இனியும், சிலர் பலவுடன் என்பதற்குப் பல பரிசிலாளருடன் (இரப்பார்) என்றும் கூறுவர்.

இரப்போர் தான் மட்டும் போகாது பல இரவலர்களையும் உடன் அழைத்துச் செல்வன் என்பது பெற்றாம்.

பாடு பெற்ற இரவலன் அதனைப் பெறப் பல இரவலாளருடன் செல்லுவானாகிய வேறு இரவலனைக்கண்டு இவ்விதம் சொன்னது.

'இன்னே' என்பதற்குப் பாடு பெற்றவன் பெறாதவனை நோக்கி யான் பெற்ற 'இப்படியே' என்றுங் கூறுவர்.

இனி, முருகப்பிரானிடம் பாடுபெற்ற இரவலன் வழியில் கண்ட இரவலர்க்கு வீடுபேறளிக்குஞ் சற்குருபரனாகிய முருகப்பிரான் எழுந்தருளி யிருக்கும் புண்ணியத் தலங்களைக் கூறுவான் அமைந்தார்.

67. செரு புகன்று எடுத்த சேண் உயர் நெடு கொடி-போரை விரும்பிக் கட்டிய மிகவும் உயர்ந்த நீண்ட கொடியினருகே,

(வி - ரை.) புகன்று, கூறி எனினும் அமையும்.

68. வரி புனை பந்தொடு பாவை தூங்க - நூலினால் வரிந்து புனையப்பெற்ற பந்தும், பொம்மையாகிய பாவையும், அறுப்பார் இன்றித் தூங்கியே இருக்குமாறு,

(வி - ரை.) வரி என்னும் தன்வினை வரிந்து என்று வினையெச்சப் பொருளில் வந்தது. வரி புனை என்பதற்கு வரிந்து அலங்கரிக்கப் பெற்ற எனினும் அமையும். பாவை என்பதற்குச் செம்மகளான பாவை யென்பாருமுளர்.

போரை விரும்பும் அரசர்கள் கோட்டை வாயிலில் பந்தையும் பாவையையும் கட்டி வைப்பர். பெண்களே பந்தினையும் பாவையையும் கொண்டு விளையாடுவர். ஆதலின், பகைவரை அறைகூவி அழைக்குங் குறிப்பாக அவற்றைக் கட்டி வைப்பர். பகைவர்களாகிய நீங்கள் போருக்கு வரவில்லை யெனில் பந்தும் பாவையும் உடைய பெண்களாவீர்; இன்றேல் ஆடவராக வேண்டின் வருக; வந்து பந்தினையும் பாவையையும் அறுத்தெறிந்து எம்முடன் போர் புரிக என்பது கருத்தாம்.

69. பொருநர் தேய்த்த போர் அறு வாயில் - போர் செய்வாரை அழித்தலினாலே எப்போதும் போர்த்தொழிலையே காணமாட்டாத வாயிலினையும்,

70. திரு வீற்றிருந்த தீது தீர் நியமத்து - திருமகள் வருத்த மின்றி வீற்றிருந்த குற்றம் நீங்கிய கடைவீதிகளையும்,

(வி - ரை.) அளவற்ற செல்வம் பயில்வதால் திருவீற்றிருந்த என்றார். கடைவீதிக்குக் குற்றமாவது :—வாங்கும் பொருள் குறைவாயிருப்பதும், பொருள் மிகுதியா யிருப்பதும், வாங்குஞ் சக்தியின்மையால் மக்கள் வாராதிருப்பதும், வஞ்சனையும் ஆகும்.

குற்றம் தீர்தல், வஞ்சனை யில்லாது நேர்மையும், பொருள் குவியக் குவிய மக்கள் அவற்றை இடைவிடாது வாங்கி அநுபவிக்கும் நிலைமையும்.

நியமம், திருப்பதி என்பாரும் உளர்.

71. மாடம் மலி மறுகில் கூடல் குடவயின் - மாடங்கள் மிகுந்த இதர வீதிகளையுமுடைய மதுரைக்கு மேற்குப் பக்கத்தில் உள்ள,

(76) அம் சிறை வண்டின் அரி கணம் - அழகிய சிறகினையுடைய அழகிய வண்டின் கூட்டங்கள்,

72. இரு சேறு அகல் வயல் விரிந்து வாய் அவிழ்ந்த - கரிய சேறு பொருந்திய விசாலமான கழனியில் கட்டவிழ்ந்து மகரந்தமும் இதழும் தோன்றும்படி மலர்ந்த,

(வி.- ரை.) இரு, மிகுந்த எனினும் அமையும்,

73. முள் தாள் தாமரை துஞ்சி - முள் பொருந்திய காம்பினை யுடைய தாமரை மலரில் இரவு தங்கி யுறங்கி,

73-74. வைகறை கள் கமழ் நெய்தல் ஊதி - விடியற் காலத்தில் தேன் மணக்கின்ற நெய்தல் மலரை யூதி,

எல் பட - கதிரவன் வெளிப்பட்ட நேரத்தே,

75-77. (கண்போல் மலர்ந்த காமரு சுனைமல, ரஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங், குன்றமர்ந் துறைதலு முரியன்:)

"அஞ்சிறை வண்டினரிக்கணம்" முன்னமேயே கூட்டப்பெற்றது.

கண் போல் மலர்ந்த காமரு சுனை மலர் ஒலிக்கும் குன்று அமர்ந்து உறைதலும் உரியன் - கண்ணை ஒக்குமாறு பூத்த ஆவல் பொருந்திய சுனைப்பூக்களில் சென்று ஆரவாரிக்கும் திருப்பரங்குன்றத்திலே திருவுளம் மகிழ்ந்து எழுந்தருளி யிருத்தலும் உரியன்,

(வி - ரை.) காமரு, அழகிய என்றும் அமையும். காமர் என்றும் ஓதுவர்.

'உம்' திருச்சீரலைவாய் முதலிய மேலே சொல்லப் போகும் க்ஷேத்திரங்களில் எழுந்தருளி இருத்தலோடு திருப்பரங்குன்றிலும் எனப் பொருள்படுவதால் எதிரதுதழீஇய எச்சவும்மையாகும்.

அதா அன்று - அதுவன்றி.

'இன்றி யென்னும் வினையெஞ் சிறுதி' என்பதில் 'தொன்றியன் மருங்கின்' என்பதனால் 'அன்றி' என்பது 'அன்று' என நின்றது.

"அன்றுவரு காலை யாவாகுதலும்" என்றதனால் 'அது' என்னுஞ் சுட்டுப்பெயர் முன் வரும் அன்று ஆன்று என முதல் நீண்டு நின்றது. மீண்டும் அதான்று என்பது இடையில் அள பெடுத்து அதா அன்று என நின்றது.

வாள் நுதல் கணவன், தார் புரளும் மார்பினன், கண்ணி மிலைந்த சென்னியன், ஆகிய சேயின் சேவடி படரும் உள்ளத்தோடே செல்லுஞ் செலவை நீ நயந்தனையாயின், நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப முன்னிய வினை இன்னே பெறுதி; பெறுதற்கு அவன் யாண்டுறைவன் எனின் திருப்பரங்குன்றமர்ந் துறைதலும் உரியன் அதுவன்றி என முடிக்க.

திருப்பரங்குன்றம், இது மதுரைக்கு மேற்கே மூன்று நான்கு மைல் தூரத்தில் உள்ளது.

முருகக்கடவுள் பராசரின் புத்திரர்களைப் பாதுகாத்த க்ஷேத்திரம். ஒரு பெண் முருகா என்று சொல்லி வர, அவள் கணவன் அதை விடுத்துத் தன் பெயர் சொல்லச் சொல்லியும் அவள் கேளாததற்காக அவன் அவள் கையினை வெட்டிவிட அதனை முருகன் வளர்த்த பெரிய க்ஷேத்திரம்.

சூரபதுமனை வென்று தேவர் சிறை மீட்டு அவர்களை வானுலகத்திற்கு அனுப்பியபோது, இந்திரன் மகிழ்ந்து தனது மகளாகிய தெய்வயானையை அவனுக்குத் திருமணம் செய்வித்த க்ஷேத்திரமும் ஆகும்.

வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
வாடா மாலை ஓடையொடு துயல்வரப்
படுமணி இரட்டு மருங்கிற் கடுநடைக்
கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பிற்
கால்கிளர்ந் தன்ன வேழ மேல்கொண்
டைவே றுருவிற் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
மின்னுறழ் இமைப்பிற் சென்னிப் பொற்ப
நகைதாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை
சேண்விளங் கியற்கை வாண்மதி கவைஇ
அகலா மீனின் அவிர்வன இமைப்பத்
தாவில் கொள்கைத் தந்தொழில் முடிமார்
மனனேர் பெழுதரு வாள்நிற முகனே
* மாயிருள் ஞால மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுகம் ஒருமுகம்
ஆர்வல ரேத்த அமர்ந்தினி தொழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே, ஒருமுகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வியோர்க் கும்மே ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே ஒருமுகஞ்
செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே ஒரு
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின் [முகங்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே ஆங்கம்
மூவிரு முகனும் முறைநவின் றொழுகலின்

---

* 'மாயிரு ஞாலம்' (பா - ம்)

ஆரந் தாழ்ந்த அம்பகட்டு மார்பிற்
செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு
வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்
விண்செலன் மரபின் ஐயர்க் கேந்திய
தொருகை, உக்கஞ் சேர்த்திய தொருகை,
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை அசைஇய
அங்குசங் கடாவ ஒருகை, இருகை [தொருகை,
ஐயிரு வட்டமொ டெஃகுவலந் திரிப்ப, ஒருகை
மார்பொடு விளங்க, ஒருகை
தாரொடு பொலிய, ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப, ஒருகை
பாடின் படுமணி இரட்ட, ஒருகை
நீனிற விசும்பின் மலிதுளி பொழிய, ஒருகை
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட ஆங்கப்
பன்னிரு கையும் பாற்பட இயற்றி
அந்தரப் பல்லியங் கறங்கத் திண்காழ்
வயிரெழுந் திசைப்ப வால்வளை ஞரல
உரந்தலைக் கொண்ட உருமிடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ
விசும்பா றாக விரைசெலன் முன்னி
உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்
அலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பே அதா அன்று

## 2.—திருச்சீரலைவாய்

### (பொழிப்புரை)

..ரிய முனையுடைய அங்குசம் வெட்டிய தழும்பு அழுந்
னை செம்புள்ளிகளை யுடைய மத்தகத்தில் பொன்னரிமாலை
நாற்றிப்பட்டத்துடன் அசையத் தொங்கும் மணிகள் மாறி மாறி
லிக்கும் பக்கத்தினையும், விரைந்த நடையினையும், இயமனைப்

போன்ற தடுத்தற்கரிய வலியினையு முடைய காற்றெழுந்தாற் போன்ற யானை மீது முருகக்கடவுள் ஏறிக்கொண்டு தாமம், மகுடம், பதுமம், கிம்புரி, கோடகம் என்னும் ஐந்து வேறு உறுப்புக்களையுடைய செய்யுந் தொழிலெல்லாம் செய்து முற்றுப் பெற்ற முடியுடன் கூடி விளங்கிய, நிறத்தினும் திறத்தினும் மாறு கொண்ட அழகிய மணிகள் மின்னலோடு மாறுபடும் ஒளி யுடன் தலைகளின் பொலிவு பெறவும், ஒளி தங்கி அசையும் தொழில்வகை அமைந்த பொற்குண்டலங்கள் தூரத்தில் சென்று விளங்கும் இயல்பினை யுடைய ஒளி பொருந்திய திங்களைச் சூழ்ந்து நீங்காத நக்ஷத்திரங்கள் போல ஒளி வீசக், கெடுதல் இல்லாத நோன்புகளை யுடைய தவத்தொழில் முடிப்பவருடைய நெஞ்சில் பொருந்தித் தோன்றும் ஒளி பொருந்திய நிறம் விளங் கும் முகங்களிலே,

ஒரு திருமுகம் பெரிய இருள் சூழ்ந்த உலகம் குற்றமில்லாது தோன்றப் பல கதிர்களைத் தோற்றுவித்தது; ஒரு திருமுகம் மந்திரத்தையுடைய வேதத்திற் கூறிய முறையில் தவறாத அந் தணர்களின் யாகங்களில் தீங்கு நிகழாதவாறு கருதா நிற்கும்; ஒரு திருமுகம் மக்களுக்கு விளங்காத வேதங்களிலும் பிறநூல்களி லும் மறைந்து கிடக்கும் பொருள்களை ஆராய்ந்து இருடிகள் இன் புறக் கூறித் திங்களைப் போல் எல்லாத் திசைகளையும் ஞானத் தால் விளக்கும்; ஒரு திருமுகம் திருவுள்ளத்தில் நிகழும் நிடுநிலை யைக் கெடுத்துச் சினந்த திருமனத்துடனே பகை யசுரரைக் கொன்று போர்க்கள வேள்வியைச் செய்தது; ஒரு திருமுகம் வேடரது மடமை பொருந்திய மகளும் வல்லிக்கொடிபோலும் இடையினை யுடைய இளம் பெண்ணும் ஆகிய வள்ளி நாயகி யோடு நகைத்து விளையாடும் மகிழ்ச்சியைப் பொருந்திற்று; அந்த ஆறு திருமுகங்களும் அத் தொழில்களை முறையாக என்றுஞ் செய்து இயங்குதலினால் அவற்றிற்கேற்ப;

பொன்மாலை தூங்கிய அழகிய பெரிய மார்பில் உள்ள உத்தம இலக்கணக் குறியாகிய சிவந்த மூன்று இரேகைகள் தம்மிடத்தில்

வந்து பொருந்துமாறு வாங்கிக் கொண்டனவும், தமது வலிமையினாலே பெரிய புகழ் நிறையப் பெற்று ஒளி பொருந்திய படைக் கலங்களை எறிந்து பகைவர் மார்புகளைப் பிளந்து அவற்றை மீண்டும் தம்மிடம் வாங்குகின்றனவும் பெருத்து உயர்கின்றனவும் ஆகிய தோள்களுள் ;

ஒரு கரம் எப்பொழுதும் வானத்தில் சஞ்சரிக்கும் தன்மையுடைய தேவமுனிவர்களுக்குப் பாது காவலாக உயர்ந்து நின்றது, அதற்கிணையாகிய ஒரு கரம் மருங்கிலே வைத்தது. ஒரு கரம் தோட்டியைச் செலுத்தாநிற்க மற்றைய கரம் அழகு பொருந்திய ஆடையை யுடைய துடையின் மீது கிடந்தது; இரு கரங்கள் வியப்பும் கருமையுங்கொண்ட கேடகத்தோடு வேற்படையையும் வலமாகச் சுழற்றும்; ஒரு கரம் முனிவர்களுக்கு உரை தெளியாத பொருளை உணர்த்தும்போது அதற்கு இணையாகிய கரம் மார்பில் தொங்கும் மாலையொடு பொருந்தி அழகு பெறும்; ஒரு கரம் மேலே உயர்த்துவதால், தோளின் பக்கமாகச் சரிகின்ற தொடியொடு மிகவும் மேலே சுழன்று போர்க்கள வேள்விக்கு முத்திரை கொடுக்க, மற்றைக் கரம் ஓசை இனிதாகத் தருகின்ற மணியினை மாறிமாறி ஒலிக்கப் பண்ணும்; ஒரு கரம் நீலநிறம் பொருந்திய மேகத்தினாலே மிகுந்த மழையைப் பெய்விக்க, அதற்குத் துணையான கரம் தெய்வமங்கையர்க்கு மணமாலையைச் சூட்டும்; அவ்வாறு அந்தப் பன்னிரு கரங்களும் முகங்களின் பகுதிப் படும்படி தொழில் இயற்றி !

ஆகாய துந்துபி முழங்கத், திண்ணிய வயிரம் பொருந்திய கொம்புகள் மிகுந்தொலிக்க, வெண்சங்கம் ஊத, வலிய இடியேற்றின் இடிப்புப் போன்ற ஓசையை யுடைய பேரிகையொடு பல பீலிகை யுடைய மயில் முருகக்கடவுளினது ஆணையினால் வென்று உயர்த்திய கொடியிலிருந்து ஒலி செய்ய, ஆகாய வழியாக முற்கூறிய யானைமேற்கொண்டு சொர்க்கத்திற்கு விரைந்து செல்லுதலைக் கருதி நலம் ஓங்கிய பெரியோர் புகழ்ந்த உயர்ந்த சிறப்புப்

பொருந்திய புகழினையுடைய திருச்சீரலைவாய் என்னுந் திருப்பதியின்கண் எழுந்தருளுதலும் அவனுக்கு நிலைபெற்ற தன்மையாம், அதுவன்றி—

## இதன் பொருள்

## 2.—திருச்சீரலைவாய்

'வைந்நுதி' முதல் 'அலைவாய்ச் சேறல்' வரை ஒரு தொடர்.

78. வைந்நுதி பொருத வடு ஆழ் வரி நுதல் - கூரிய முனையுடைய அங்குசம் வெட்டிய தழும்பு அழுந்தின செம்புள்ளிகளையுடைய மத்தகத்திலே,

(வி - ரை.) வடு ஆழ், தழும்பு ஆழ்ந்த எனினும் அமையும்; வடு வாழ் எனப் பிரித்துப் புண்ணமர்ந்த என்றும் உரைப்பர்.

வைந்நுதி, அடையடுத்த பண்பாகு பெயர் என்றாவது அன்மொழித் தொகை யென்றாவது கொள்க.

79. வாடா மாலை ஓடையொடு துயல்வர - பொன்னரி மாலை நெற்றிப் பட்டத்துடன் அசைய,

(வி - ரை.) வாடா மாலை, வாடாத கற்பகமாலை எனினும் அமையும்.

80. படும் மணி இரட்டும் மருங்கின் - தொங்கும் மணிகள் மாறிமாறிச் சப்திக்கும் பக்கத்தினையும்,

(வி - ரை.) படுமணி, ஓசை மணி என்பாரும் உளர்.

கடு நடை - வேகமான நடையினையும்,

81. கூற்றத்து அன்ன மாற்றரு மொய்ம்பின் - இயமனைப் போன்ற எவராலுந் தடுத்தற்கரிய வலியினையு முடைய,

82. கால் கிளர்ந்தன்ன வேழம் மேல் கொண்டு - ஒடுஞ் சமயத்துக் காற்றெழுந்தாற் போன்ற யானைமீதேறி,

(வி - ரை.) காற்று எழுந்தது போன்ற விரைவினை யுடைய யானையின்மேலேறி எனினும் பொருந்தும்.

மருங்கினையும், நடையினையும், வலியினையும் உடைய வேழத்தை நுதலில் மாலை யசைய மணி இரட்ட ஏறி என முடிக்க.

83-84. ஐவேறு உருவின் செய்வினை முற்றிய முடியொடு விளங்கிய முரண் மிகு திருமணி - ஐந்து வெவ்வேறு உறுப்புக்களை யுடைய செய்யுந் தொழிலெல்லாம் செய்து முற்றுப்பெற்ற முடியுடன் கூடி விளங்கிய ஒன்றற்கொன்று நிறத்தினும் திறத்தினும் மாறுபாடு மிகுந்த அழகான இரத்தினங்கள்,

ஐந்து வகை உறுப்புக்களாவன:—தாமம், மகுடம், பதுமம், கோடகம், கிம்புரி இதுவுமன்றிக் கோடகம், கிம்புரி, மகுடம், பதுமம், காணுகம் என்று ஐவகை முடிவடிவங்கள் என்றும்; அன்றியும் சடாமகுடம், கிரீடமகுடம், தாண்டிகாமகுடம், அமைமகுடம், கன்னிகாமகுடம் என ஐவகை முடி என்றும் கூறுவர்.

85. மின் உறழ் இமைப்பின் சென்னி பொற்ப - மின்னலோடு மாறுபடும் ஒளியுடனே சிரசுகளில் பொலிவு பெறவும்,

(வி - ரை.) மின் உறழ், மின்னலை யொத்த எனினும் அமையும். சென்னி, திருமுடியெனவும் அமையும். பொற்ப, அழகு பெறவும், அன்றியும் விளங்கவும் எனினுமாம்.

86. நகை தாழ்பு துயல் வரூஉம் வகை அமை பொலங்குழை - ஒளி தங்கி அசையும் தொழில்வகை அமைந்த பொற்குண்டலங்கள்,

87-88. சேண் விளங்கு இயற்கை வாள் மதி கவைஇ அகலா மீனின் அவிர்வனஇமைப்ப - தூரத்திற்சென்று விளங்கும் இயல்பினை யுடைய ஒளி பொருந்திய சந்திரனைச் சூழ்ந்து நீங்காத நக்ஷத்திரங்கள் போல் விளங்குவனவாய் ஒளியை வீச,

(வி - ரை.) சேண், ஆகாயம் என்றும் உரைப்பர்.



மீன், உரோகணி முதலிய நக்ஷத்திரங்கள்; அல்லது வியாழமும் வெள்ளியும் ஆகும்.

89. தா இல் கொள்கை தம் தொழில் முடிமார் - கெடுதல் இல்லாத நோன்புகளையுடைய தங்கள் தவத்தொழில் முடிப்பவருடைய,

(வி - ரை.) தா, வருத்தம் எனினும் பொருந்தும். விரதம் அனுட்டித்தலில் வருத்தம் இல்லையோ எனின், விரத ஆரம்பத்தில் கஷ்டம் உண்டு; பின்னர் அனுட்டிக்குந் தோறும் வருத்தம் மறைந்து விரத நியமங்கள் எளியன வாகின்றன.

கொள்கை, கோட்பாடு எனினும் அமையும்.

90. மனன் நேர்பு எழுதரு வாள் நிறம் முகன் - அன்பர் நெஞ்சத்தில் பொருந்தித் தோன்றுகின்ற ஒளி பொருந்திய நிறமுடைய முகங்களிலே,

(வி - ரை.) ஏர்பு எனப் பிரித்து அழகுபெற எனினும் அமையும். வாள்நிற முகன் என்பதற்கு ஒளிவிடுகின்ற ஆறு திருமுகங்களை யுடையவன், அந்தத் திருமுகங்களின் படிவஞ் சொல்லின் என்பாரும் உளர். 'முகங்கள்' ஆறினுக்கும் பொது ஆதலின் முகம் சாதியொருமை.

சென்னி பொற்ப மீனின் இமைப்ப எழுதரு முகம் என முடிக்க.

91-92. (மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப், பல் கதிர் விரிந்தன் றொருமுகம்:) ஒருமுகம் மா இருள் ஞாலம் மறுஇன்றி பல்கதிர் விரிந்தன்று - ஒரு திருமுகம் பெரிய இருள் சூழ்ந்த உலகம் குற்றம் இல்லாது பல கதிர்களைத் தோற்றுவித்தது,

(வி - ரை.) மா இரு ஞாலம் என்று ஓதி மிகப் பெரிய உலகம் என்று கூறுவாரும் உளர்.

92-94. ஒருமுகம் ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது ஒழுகி காதலின் உவந்து வரம் கொடுத்தன்று - ஒரு திருமுகம் தன்மீது அன்பு பூண்டவர்கள் துதிக்க அவர்களது குறை நீக்கும் பொருட்டு இசைந்து அவர்கள்பால் இனிமையாக நடந்து அவர்கள்மீது சென்ற காதலினால் மகிழ்ந்து விரும்பும் வரங்களை முற்றுங் கொடுத்தது,

(வி - ரை.) ஆர்வலர் ஏத்த, ஏழையர் இரந்து துதிக்க என்றும் சொல்லுவர்.

94-96. ஒருமுகம் மந்திர விதியின் மரபுளி வழாஅ அந்தணர் வேள்வி ஓர்க்கும் - ஒரு திருமுகம் மந்திரத்தை யுடைய வேதத்திற் சொல்லிய முறையில் தவறாத அந்தணர்களின் யாகங்களில் தீங்கு நிகழாதவாறு கருதாநிற்கும்,

(வி - ரை.) அந்தணர் அழகிய தட்பத்தினை (அருளை) யுடையவர். அந்தத்தை (வேதாந்தத்தை) அணவுவார் (நோக்குவார்) என்பாரும் உளர்.

மரபுளி என்பதில் உளி மூன்றாவதன் உருபு பொருள் படுவதோர் இடைச்சொல்லாகும்; பகுதிப்பொருள் விகுதி எனினும் அமையும்.

வேள்வி ஓர்க்கும், வேள்விகளைத் திருவுள்ளத்தினடைக்கும் என்றும் உரைப்பர்.

96-98. (ஒருமுக, மெஞ்சிய பொருள்களை யேமுற நாடித், திங்கள் போலத் திசைவிளக் கும்மே:) ஒரு முகம் எஞ்சிய பொருள்களை நாடி ஏம் உற திங்கள் போல திசை விளக்கும் - ஒரு திருமுகம் மக்களுக்கு விளங்காத வேதங்களிலும் பிற நூல்களிலும் மறைந்து கிடக்கும் ஆராய்ந்து இருடிகள் இன்புறக் கூறிச் சந்திரனைப்போல் எல்லாத் திசைகளையும் ஞானத்தால் விளக்கும்,

(வி - ரை.) ஏம், உய்வு என்று கூறினும் அமையும்; ஏம் உற நாடி, இலக்கை பொருந்த ஆராய்ந்து என்றுங் கூறுவர்.

ஏம், இடைக் குறைக்கப்பட்டது என்றுவது கடைக் குறைக் கப்பட்ட தென்றுவது கொள்க. எல்லாக் கலைகளும் பொருந்தி இருத்தலால் திங்கள் உவமையாகியது.

98-100. (ஒருமுகஞ் செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக் கிக், கருவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே :) ஒரு முகம் செல் சமம் முருக்கி கருவு கொள் நெஞ்சமொடு செறுநர் தேய்த்து களம் வேட்டன்று - ஒரு திருமுகம் திருவுள்ளத்தில் நிகழும் நடுநிலையைக் கெடுத்துச் சினந்த திருவுள்ளத்துடனே பகையசுரரைக் கொன்று யுத்தகள வேள்வியைச் செய்தது,

(வி - ரை.) செல் சமம் முருக்கி, அசுரர் பிறர்மேல் சென்று செய்யும் போரைக் கெடுத்து என்று கூறுவாரும் உளர்.

களம்வேட்டன்று, போர்க்களத்தை விரும்பாநிற்கும் என் றும் உரைப்பர்.

களவேள்வி - பேய்களும், கழுகுகளும், வயிறார உண்டு மகிழும்படி பகைவரை யுத்தகளத்தில் கொன்று குவிப்பது.

சமம் - சமத்துவம், நடுநிலை; அதனைக் கெடுத்தலாவது, அசுரரையும் தேவர்களையும் ஒப்பக் கருதாது அசுரரைக்கொன்று தேவர்களைப் பாதுகாப்பது. இது வழுவன்று. இது துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலனமாகும், இறைவன் கடன் அது.

100-102. (ஒருமுகங், குறவர் மடமகள் கொடிபோனுசுப் பின், மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே :)

ஒருமுகம் குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின் மடவரல் வள்ளியொடு நகை அமர்ந்தன்று - ஒரு திருமுகம் வேடரது மடமை பொருந்திய மகளும், வல்லிக்கொடி போலும் இடையினை யுடைய இளம்பெண்ணுமாகிய வள்ளிநாயகியொடு நகைத்து விளை யாடும் மகிழ்ச்சியைப் பொருந்திற்று,

(வி - ரை.) மடமகள், மேன்மை பொருந்திய மகள் என்றும் உரைப்பர். கொடிபோல், வள்ளிசாதக்கொடி போன்ற என்றுங்

கூறுவர். மடவரல், கற்பின் வரலாற்றினையுமுடைய என்றும் பொருள் உரைப்பர்.

நகை யமர்ந்தன்று, சிரித்து விளையாடலை விரும்பிற்று எனினும் அமையும்.

மடவரல் நகை எனக் கூட்டி அறியாமை பொருந்திய நகை எனினும் பொருந்தும். வள்ளி, முருகக் கடவுளுக்கு இச்சாசக்தி என்க. காமநுகர்ச்சி யில்லாத கடவுள் வள்ளியொடு நகையமர்தல் எதற்கோவெனின், உலகில் இல்லறம் இயங்குதற் பொருட்டாகும்.

விரிந்தன்று முதலியன முற்றுக்களாகும்.

102-103. (ஆங்கம் மூவிரு முகனு முறைநவின் றொழுகலின் :) அ மூவிரு முகனும் - அந்த ஆறு திருமுகங்களும்,

ஆங்கு முறை நவின்று ஒழுகலின் - அத் தொழில்களை முறையாக என்றுஞ் செய்து இயங்குதலினால் அத் திருமுகங்களுக்கு ஏற்ப,

(வி - ரை.) ஆங்கு, அவ்வனத்தில் என்றும்; நவின்று ஒழுகலின், விளங்கி ஒழுகாநிற்கும் என்றும் கூறுவர்.

104-106. (ஆரந் தாழ்ந்த அகம்பகட்டு மார்பிற், செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு, வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்:)

ஆரம் தாழ்ந்த அம் பகட்டு மார்பின் செம்பொறி வாங்கிய தோள் - பொன்மாலை தூங்கிய அழகிய பெரிய மார்பினுள்ள உத்தம இலக்கணகுறி யாகிய சிவந்த மூன்று இரேகைகள் தன்னிடத்தில் வந்து பொருந்துமாறு வாங்கிக் கொண்ட தோள்,

(வி - ரை.) தோள் வரைக்கும் வந்து பொருந்துதலைக் காட்ட 'வாங்கிய' என்றார். ஆரம், கடம்பு, பதக்கம், பூமாலை, முத்துமாலை எனினும் அமையும். தாழ்ந்த, தாங்கிய எனினும் அமையும்.

மார்பின் செம்பொறி வாங்கிய மொய்ம்பின், மார்பிலே ஸ்ரீதேவியைக் கைக்கொண்ட வலியினையும் என்பாரும் உளர்

மொய்ம்பின் வண்புகழ் நிறைந்து - தனது வலிமையினாலே பெரிய புகழ் நிறையப்பெற்று,

(வி - ரை.) மொய்ம்பின் சுடர் விடுபு வள்புகழ் நிறைந்து, வலிமையினால் படைக்கலங்களை எறிந்து பெரும் புகழ் நிறைந்து என்றும் உரைப்பர்.

சுடர் விடுபு வசிந்து வாங்கு தோள் - ஒளிபொருந்திய படைக்கலங்களை எறிந்து பகைவர் மார்புகளைப் பிளந்து அவற்றை மீண்டும் தன்னிடம் வாங்குகின்ற தோள்.

வாங்கு, பகைவர் உயிரை வாங்கும் எனினும் அமையும்.

(வி - ரை.) சுடர், ஒளி அதனையுடைய படைக்கலத்திற்கானதால் ஆகுபெயர். சுடர் விடுபு வள்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர் தோள், ஒளி விடுகின்ற வளவிய புகழ் நிறைந்து வளர்ந்து நீண்டு நிமிர்ந்த தோள்கள் என்று கூறுவாருமுளர்.

நிமிர் தோள் - பெருத்து உயரும் தோள்,

(வி - ரை.) பகைவரோடு உக்கிரமாகப் போர் செய்யும் சமயத்துப் பன்னிரு தோள்களாலும் படைக்கலம் வீசுதல் இயல்பே. இதனை 'அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி' (58-ம் வரி) என்றதனால் உணர்க.

இனிப் போர் நிகழாச் சமயத்து ஒவ்வொரு கரத்தின் தொழில் கூறுகின்றார்.

107. (விண்செலன் மரபி னையர்க் கேந்திய தொருகை:) ஒருகை விண் செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது - ஒருகரம் எப்பொழுதும் வானத்தில் சஞ்சரிக்கும் முறைமையினையுடைய தேவ முனிவர்களுக்குப் பாதுகாவலாக உயர்ந்து நின்றது,

(வி - ரை.) இனி இதற்கு ஆகாயத்திலே இயக்கத்தை முறைமையாக வுடைய தேவர்களுக்கு அபயத்தம் கொடாநிற்கும் ஒரு கரம் என்பாரு முளர்.

அதற்கு இணையாகிய,

108. (உக்கஞ் சேர்த்திய தொருகை:) ஒருகை உக்கம் சேர்த்தியது - ஒருகை இடுப்பிலே வைத்தது.

(வி - ரை.) தேவமுனிவர் கதிரவனுடனே சஞ்சரித்து, அவனுடைய வெப்பத்தைத் தாம் ஏற்றுக் கருணையால் மன்னுயிர்களைக் காக்கின்றனர். அதனுனே, 'விண் செலல் மரபின் ஐயர்' என்றார். அவரைக் காத்தற்கே முதற் கரம் உயர்ந்து நின்றது. இக் கரம் மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப் பல்கதிர் விரிந்த முகத்திற்கியைய தொழில் புரிந்திற்று. முருகனின் நெஞ்சமும், முகமும், கரமும் ஒரே தொழிலில் ஐக்கிய மானதால் அக் கரத்தின் துணைக் கரம் தொழிலின்றி மருங்கினில் கிடந்தது.

109-110. (நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசை இய தொருகை, யங்குசங் கடாவ வொருகை :) ஒருகை அங்குசம் கடாவ ஒருகை நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை அசை இயது - ஒருகரம் அங்குசத்தைச் செலுத்தா நிற்க மற்றைய கரம் அழகு பொருந்திய ஆடையை யுடைய துடையின்மீது கிடந்தது,

(வி - ரை.) நலம்பெறு, சிவந்த நிறம் பெற்ற எனினும் நன்மை பொருந்திய எனினும் அமையும். கலிங்கம், புடவை என்பாரு முளர். இது யானைமீதூர்வாரின் இயல்பு. தன்னை வேண்டுவார் முன் யானைமீதூர்ந்து சென்று அருள் புரிவது இயல்பாதலின் இக் கரங்கள் காதலின் உவந்து வரங் கொடுக்கும் முகத்திற்கு ஏற்பத் தொழில் புரிந்தன.

110-111. இரு கை ஐஇரு வட்டமொடு எஃகு வலம் திரிப்ப - இருகரங்கள் வியப்பும் கருமையும் பொருந்திய கேடகத்தொடு வேற்படையையும் வலமாகச் சுழற்ற,

(வி - ரை.) ஐயிருவட்டம், அழகிய பெரிய கேடகம் எனி னும் அமையும். ஐந்தாகிய பெருத்த என்றும், பத்துத் திருமுகத் திணையுடைய கேடகம் என்றும் கூறுவாரும் உளர். வலம் திரிப்ப, வெற்றிபெறச் சுற்ற என்றுங் கூறுவர். அசுரர் தோன்றி யாகத்தை அழிக்காதிருக்கும்படி அவர்களை ஓட்டுதற்கு இக் கரங் கள் கேடகத்தைச் சுற்றலின் வேள்வி ஓர்க்கும் முகத்திற்கு ஏற்பத் தொழில் புரிந்தன.

111-113. ஒருகை மார்பொடு விளங்க ஒருகை தாரொடு பொலிய - ஒருகரம் முனிவர்களுக்கு உரை தெளியாத பொருளை உணர்த்தும்போது சின்முத்திரையாக மார்பினுடன் விளங்க அதற்கிணையாகிய கரம், மார்பின் தொங்கும் மாலையொடு பொருந்தி அழகு பெற,

(வி - ரை.) இதற்கு ஒருகரம் திருமார்பின்கண் மவுன மந்தி ரத்தைப் பேணு நிற்கும், ஒருகரம் திருமாலையைத் திருத்தக நிற் கும் என்றுங் கூறுவர். முனிவர்முன் முருகன் மோன முத்திரை யைக் காட்ட அவர்கள் ஆனந்தமயமான பிரகாசம் நிறையப் பெறு கின்றனர். இதனையே மார்பொடு விளங்க என்றார். இக் கரங்கள் எஞ்சிய பொருளை விளக்கும் முகத்திற்கு ஏற்பத்தொழில் புரிந்தன.

113-115. (ஒருகை கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப வொருகை, பாடின் படுமணி யிரட்ட:) ஒருகை தொடி யொடு மீமிசை கொட்ப கீழ் வீழ் ஒருகை பாடு இன் படுமணி இரட்ட - ஒருகரம் மேலே உயர்த்துவதால் தோளின் பக்கமாகச் சரியும் தொடி என்னும் பூணொடு மிகவும் மேலே சுழன்று யுத்த கள வேள்விக்கு முத்திரை கொடுக்க, மற்றைக் கரமானது ஓசை இனி தாகத் தருகின்ற ஒளிக்கின்ற மணியினை மாறிமாறி ஒலிக்கச்செய்ய,

(வி - ரை.) மீமிசை, மென்மேலும் என்றும்; கீழ் வீழ் தொடி யொடு, பாரவளையோடே என்றும்; படுமணி, ஆடுகின்ற மணி என் றுங் கூறுவர்.

இக் கரங்கள் கனவேள்வி வேட்ட முகத்திற்கு ஏற்பத் தொழில் புரிந்தன.

115-117. ஒருகை நீல நிற விசும்பின் மலி துளி பொழிய ஒருகை வான் அரமகளிர்க்கு வதுவை சூட்ட - ஒருகரம் நீல நிறம் பொருந்திய மேகத்திலுள்ள மிகுந்த மழையைப் பெய்விக்க அதற்குத் துணையாகிய மற்றைக் கரம் தெய்வமங்கையர்க்கு மண மாலையைச் சூட்ட,

(வி - ரை.) விசும்பின், ஆகாயத்தின் என்பாருமுளர். உலகில் இல்லறம் நிகழ்த்துவித்தது வள்ளியொடு நகையமர்ந்த முகம். இப்போது "நீரின் றமையா துலகெனின் வானின் றமையா தொழுக்கு" எனுங் குறளுக்கு ஏற்ப ஒரு கரத்தால் அவ் வில்லறம் நிகழ்தற்பொருட்டு விசும்பின் மழை பெய்வித்தது. ஒருகை வான் அரமகளிர்க்கு வதுவை சூட்டி இல்லறத்தை நிகழ்த்தியது.

117-118. ஆங்கு அ பன்னிருகையும் பால் பட இயற்றி - அவ்வாறு அந்தப் பன்னிரு கரங்களும் முகங்களின் பகுதிப் படுமாறு தொழில் இயற்றி,

(வி - ரை.) பால்பட, தத்தமக்கு உரிய முறையிலே எனினும் அமையும். ஆங்கு, ஆக என்பாருமுளர். நீலம், கடைக்குறைந்து நீல் என நின்றது. இயற்றி என்பது இயற்ற எனும் பொருளில் வந்தது, எச்சமயக்கம்.

| முகங்களின் தொழில் | அம் முகங்களுக்குப் பொருத்தமாகத் தோள்களின் தொழில். |
|---|---|
| ஒருமுகம் வேள்வி ஓர்க்கும் | இருகை எஃகு வலந்திரிப்ப |
| ஒருகை திசை விளக்கும் | ஒருகை மார்பொடு விளங்க<br>ஒருகை தாரொடு பொலிய |
| ஒருமுகம் களம் வேட்டன்று | ஒருகை மீமிசைக் கொட்ப<br>ஒருகை மணி இரட்ட. |
| ஒருமுகம் வள்ளி யொடு நகை யமர்ந்தன்று | ஒருகை துளி பொழிய<br>ஒருகை வதுவை சூட்ட |
| ஒருமுக பல் கதிர் விரிந்தன்று | ஒருகை ஐயருக் கேந்தியது<br>ஒருகை உக்கஞ் சேர்த்தியது |
| ஒருமுகம் வரங்கொடுத்தன்று | ஒருகை அங்குசம் கடாவ<br>ஒருகை குறங்கின் அசைந்தது |

அவ்விதம் பன்னிரு கரங்களும் முகங்களின் பகுதிப்படும்படி தொழில் புரிந்தன எனக் கொள்க.

திரிப்ப முதல் நிகழ்கால எச்சங்கள் ஏந்தியது சேர்த்திய தென்ற முற்றுவினை கொண்டு முடிந்தன.

119. அந்தரம் பல்லியம் கறங்க – ஆகாய துந்துபி முழங்க,

(வி - ரை.) பல் இயம் - பல வாச்சியம்.

119-120. திண் காழ் வயிர் எழுந்து இசைப்ப – திண்ணிய வயிரம் பொருந்திய கொம்புகள் மிகுந்து ஒலிக்க,

(வி - ரை.) காழ் வயிர், கறுத்த கொம்பு என்பாருமுளர்.

வால் வளை ஞரல – வெண்சங்கு முழங்க,

(வி - ரை.) வால், தூய எனினும் அமையும்.

121. உரம் தலை கொண்ட உரும் இடி முரசமொடு – வலிமையைத் தன்னிடத்தே கொண்ட இடியேற்றின் இடிப்புப் போன்ற ஓசையை யுடைய பேரிகையொடு,

(வி - ரை.) பேரிகை ஓசையுடன் எனினும் பொருந்தும்.

122. பல் பொறி மஞ்ஞை வெல் கொடி அகவ - பல் பீலிகைகளை யுடைய மயிலானது முருகனது ஆணையினால் வென்று உயர்த்திய கொடியிலிருந்து ஒலி செய்ய,

(வி - ரை.) பொறி, வரியும் புள்ளியும்; அவற்றை யுடைய பீலிகைக்கு ஆனதால் ஆகுபெயர்.

123. விசும்பு ஆறாக - ஆகாய வழியாக,

விரை செலல் முன்னி - முற்கூறிய வேழம் மேற்கொண்டு வானத்திற்கு விரைந்து செல்லுதலைக் கருதி,

124. (உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர் :) ஓங்கு உலகம் புகழ்ந்த உயர் விழுச்சீர் - நலம் ஓங்கிய பெரியோர் புகழ்ந்த உயர்ந்த சிறப்புப் பொருந்திய புகழினையுடைய,

(வி - ரை.) ஓங்குயர் மிக்க என்று கூறினும் அமையும்.

விழு சீர், விழுமிய அழகு என்பாருமுளர்.

125. அலைவாய் சேறலும் நிலைஇய பண்பு - திருச்சீரலைவாய் என்னும் திருப்பதியின்கண் எழுந்தருளுதலும் அவனுக்கு நிலை பெற்ற தன்மையாம்,

(வி - ரை.) சேறலும், செறிதலும் என்றும்; நிலைஇய பண்பே, சார்வு தரும் என்றும் கூறுவாருமுளர்.

திருப்பரங்குன் றமர்ந்துறைதலும் உரியன்; அதா அன்று வேழமேற்கொண்டு இயற்றிக் கறங்க இசைப்ப ஞால அகவ முன்னி அலைவாய்ச் சேறலும் நிலை இய பண்பே என முடிக்க.

அதா அன்று - அதுவன்றி.

திருச்சீரலைவாய், கந்தமாதனம், சந்தனசலம், திருச்செந்தி, திருச்செந்தில், திருச்செந்தூர் என்னும் பெயர்களான் வழங்கும்.

இது திருநெல்வேலிக்குத் தென் திசையின்கண் பத்துக் காதவழி தூரத்தில் உள்ளது. வியாசர்மூலம் உபதேசம் பெற்ற சுகரும் நாரதர்மூலம் உபதேசம்பெற்ற வெண்யானையும் போற்றி முருகன் அருள் பெற்ற க்ஷேத்திரமாகும். முருகக்கடவுள் வானவர் இடையூறுகளைக் களையும் பொருட்டுச் சூரபதுமன் முதலானோரை அழித்து வீரவாகுதேவர் முதலிய நவவீரர்களுடன் படைவீடு கொண்டருளிய க்ஷேத்திரமாகும்.

---

சீரை தைஇய உடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வால்நரை முடியினர்
மாசற இமைக்கும் உருவினர் மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்பெழுந் தியங்கு மியாக்கையர் நன்பகல்
பலவுடன் கழிந்த உண்டியர் இகலொடு
செற்ற நீக்கிய மனத்தின ரியாவதுங்
கற்றோ ரறியா அறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சியர் இடும்பை
யாவது மறியா இயல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புகப்
புகைமுகந் தன்ன மாசில் தூஉடை
முகைவாய் அவிழ்ந்த தகைசூழ் ஆகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின்
நல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவலர் இன்னரம் புளர
நோயின் றியன்ற யாக்கையர் மாவின்
அவிர்தளிர் புரையும் மேனியர் அவிர்தொறும்
பொன்னுரை கடுக்குந் திதலையர் இன்னகைப்
பருமந் தாங்கிய பணிந்தேந் தல்குல்
மாசில் மகளிரொடு மறுஇன்றி விளங்கக்
கடுவொ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்(று)
அழலென உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறற்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வனும் வெள்ளேறு
வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்

உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனும்
நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்
தீரிரண் டேந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்
நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
உலகங் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவருந் தலைவ ராக
ஏமுறு ஞாலந் தன்னில் தோன்றித்
தாமரை பயந்த தாவில் ஊழி
நான்முக ஒருவற் சுட்டிக் காண்வரப்
பகலின் தோன்றும் இகலில் காட்சி
நால்வே றியற்கைப் பதினொரு மூவரொடு
ஒன்பதிற் றிரட்டி உயர்நிலை பெறீஇயர்
மீன்பூத் தன்ன தோன்றலர் மீன்சேர்பு
வளிகிளர்ந் தன்ன செலவினர் வளியிடைத்
தீயெழுந் தன்ன திறலினர் தீப்பட
உரும்இடித் தன்ன குரலினர் விழுமிய
உறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மார்
அந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்
தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்
ஆவினன்குடி அசைதலும் உரியன் அதாஅன்று

# 3.—திருவாவினன்குடி

(பொழிப்புரை)

மரவுரியை உடையாக உடையவரும், அழகுடன் வடிவிலும் நிறத்திலும் வலம்புரிச்சங்கு ஒத்த வெள்ளிய நரைமுடி யுடைய வரும், அழுக்கற விளங்கும் உருவத்தினரும், மான்தோல் போர்த் ததும் விரதப்பட்டினியால் தசை வற்றிய மார்பில் விலா எலும்பு தோன்றி யசைவதும் ஆகிய உடலை யுடையவரும், பொருள் அனு பவத்திற்குரிய நல்ல பகல்கள் பலவும் ஒரு சேரக் கழிந்த உணவை யுடையவரும், பகையொடு கொடுஞ் சினத்தினையும் நீக்கிய மனத் தினை யுடையவரும், பலவுங் கற்றவர் சிறிதும் உணரமாட்டாத இயற்கை யறிவு வாய்ந்தவரும், படித்துணர்ந்தவர்க்குத் தாம் எல்லையாகிய சிறப்பினை யுடையவரும், காமம், வெகுளி, மயக்கம் நீக்கிய அறிவினை யுடையவரும், தவத்தினால் மெய் வருத்தம் உண் டாயினும் மனத்தினால் வருத்தம் சற்றும் உணராத இயல்பினை யுடையவரும், திருவுள்ளம் பொருந்துதல் வரும்படி வெறுப்பு நீங்கிய நல்ல அறிவினை யுடையவரும் ஆகிய முனிவர்கள் முன்னே செல்ல;

பாலின் புகையைக் காத்தால் முகந்தாற் போன்ற தெய்வத் தன்மையால் அழுக்கேறாத தூய ஆடையினையும், அரும்புவாய் நெகிழ்ந்த மாலை அணிந்த மார்பினையும், எஃகுச்செவியி னால் சுருதி யளந்து நரம்பு கட்டிய சுற்றுதல் பொருந்திய வார் கட்டுடைய நல்ல யாழிசையில் பயின்ற இனிமைவாய்ந்த நெஞ் சினால் எப்போதும் மென்மொழியையே பேசுதல் பொருந்திய கந்தருவர் இனிய நரம்பு வாசிக்க மாந்தருக்குரிய பிணியில்லை யாமாறு நிருமித்த உடம்பினை யுடையவராய், விளங்குந் தோறும் பொன்னுரைத்தாற் போலும் தேமலுடையவராய்க் கண் களுக்கினிய பதினெண்கோவைப் பருமம் தரித்த தாழும் இடத் துத் தாழ்ந்து உயரும் இடத்து உயர்ந்த நிதம்பத்தினை யுடைய குற்றமற்ற கந்தருவ மங்கையருடனே குற்றமின்றி விளங்க ;

விடத்துடனே உறைக்குள் கிடந்த துளை பொருந்திய வெண் பற்களையும், நெருப்புப் போலும் நெட்டுயிர்ப்பு விடுவதும் கண்டா ருக்குப் பயந் தோன்றுவதும் ஆகிய கொடிய வலியினையு முடைய பாம்பு சாகும்படி அடிக்கும் பல வரிகளையும், வளைந்த சிறகினையு முடைய கருடனை அணிந்த நீண்ட கொடியினை யுடைய திருமாலும்;

வெற்றிக் களத்தில் வெண்மையான விடையை வெற்றிக் கொடியாக உயர்த்தியவனும், உமாதேவி வலப்பக்கத்தில் விளங்கப் பெற்றவனும், பலரும் புகழ்கின்ற வலிய தோளினை யுடையவனும், இமைத்தல் இல்லாத மூன்று கண்களையுடையவனும் ஆகிய மூப் புரங்களை எரித்த வலிமை மிகுந்த சிவபெருமானும் ;

ஆயிரங் கண்களையும், நூறு பல வேள்விகளைச் செய்து முடித்ததனாற் பெற்றதும் பகைவரை வென்று சாக அடிக்கின்ற தும் ஆகிய வெற்றியினையும், தலையில் ஏந்திய நான்கு தந்தங்களை யும், அழகிய நடையினையும், நிலம்வரை தாழ்ந்து கிடந்த துதிக்கை யினையும் உடைய யாவரும் உயர்த்துக் கூறும் வெள்ளை யானையின் புறக் கழுத்தில் ஏறிய திருமகள் விளங்கும் தேவேந்திரனும் ;

இந்திரன், இயமன், வருணன், குபேரன் என்னும் திக்குப் பாலர் ஆகிய நான்கு பெரிய தெய்வங்களையுடைய நல்ல நகரங்கள் நிலைபெற்ற உலகத்தைப் பாதுகாக்கும் ஒப்பற்ற ஓர் தொழிலையே விரும்பிய உறுதியை யுடைய, பலரும் போற்றுகின்ற அயன், அரி, அரன் என்னும் முத்தேவர்களும் தத்தமக்குரிய தொழில்களை முன்னர்ப் போன்றே பெற்று இயற்றித் தலைவராமாறு, முருகக் கடவுள் சபித்தலால் பூமியில் இறங்கி மயக்கம் உறுகின்ற நான்கு முகங்களை யுடையவனும் திருமால் தன் உந்தித்தாமரை பெற்ற கற்பகாலந்தோறும் தனது சிருட்டித் தொழில் சிரமம் இல்லாத ஒப்பற்றவனும் ஆகிய பிரமனைப் பண்டைய நிலையில் நிறுத்த நினைத் துத் தன்னை வந்து தரிசிக்கவும், ஒரு பொருளைப் பலவாமாறு பகுத்து ஆயும்போது வேறுபடக் காணும் தம்முள் மாறுபாடில் லாத அறிவினையுடைய நான்கு வகையாக வேறுபட்ட இயல்பினை

யுடைய மூப்பத்து மூவரும், பதினெட்டு வகையாகிய உன்னத நிலையைப்பெற்ற கணங்களும், வானத்தில் நட்சத்திரங்கள் பொலிவு பெற்றுத் தோன்றினாற் போலும் தோற்றத்தினை யுடையவராய், மீன்கள் சஞ்சரிக்கின்ற கடலினிடத்தைச் சேர்ந்து காற்றடித்தாற் போன்ற நடையினை யுடையவராய்க், காற்றிலே நெருப்பெழுந்தாற் போன்ற சக்தி யுடையவராய், நெருப்புத் தோன்ற இடியேறு இடித்தாற் போலும் குரலினை யுடையவராய்த் தமது சிறந்த தொழிலைப் பழமைபோல அடையும் முறைமையைக் குறையிரந்து நின்று முடித்துக் கொள்வதற்கு வானத்தில் வட்டமிட்டவராய்த், திரண்டு வந்து காணுமாறு வருத்தமில்லாத அருட்கற்பினை யுடைய தெய்வயானையாருடனே ஆவினன்குடி என்னும் திருப்பதியின் கண்ணே சில தினங்கள் தங்கி யிருத்தலையும் உரியன், அதுவன்றி—

## இதன் பொருள்

## 3—திருவாவினன்குடி

'சீரை தைஇய' முதல் 'முனிவர் முற்புக' வரை ஒரு தொடர்.

126. சீரை தைஇய உடுக்கையர் - மரவுரியை ஆடையாகப் பண்ணிய உடையினை யுடையவர்,

(வி - ரை.) தைஇய, சேர்த்துத் தைத்த என்பாருமுளர்.

கற்றோய்த்தல் (காவித்துணி) என்றும் உரைப்பர்.

126-127. சீரொடு வலம்புரி புரையும் வால் நரை முடியினர் - அழகுடன் வடிவிலும் நிறத்திலும் வலம்புரிச்சங்கினை யொத்த வெண்மையான நரைத்த முடியினை யுடையவர்,

(வி - ரை.) வால் நரை முடியினர், வெண்மையான நரைக் கொண்டையை யுடையார் என்றுங் கூறுவர்.

128. மாசு அற இமைக்கும் உருவினர் - எப்போதும் நீராடுவதாய் அழுக்கு அற விளங்கும் உருவத்தினை யுடையவர்,

(வி - ரை.) குற்ற மற்று விளங்கும் எனினும் பொருந்தும்; உருவினர், நிறத்தினை யுடையவர் எனினும் அமையும்.

128-130. மானின் உரிவை தைஇய ஊன் கெடு மார்பின் என்பு எழுந்து இயங்கும் யாக்கையர் - மான் தோலைப் போர்த்த, விரதங்களால் பட்டினி கிடத்தலின் தசை வற்றியமார்பில் விலா எலும்புக்கோவை தோன்றி அசையும் உடலை யுடையவர்,

(வி - ரை.) தைஇய மார்பின் எனக் கூட்டுக. தைஇய, தைத்திட்ட எனினுமாம்.

130-131. நன் பகல் பல உடன் கழிந்த உண்டியர் - எப்பொருளையும் அனுபவித்தற்கு உரிய நல்ல பகல்கள் ஒரு சேரக் கழிந்த உணவை யுடையவரும்,

(வி - ரை.) எனின் பல நாட்கள் வரையிலும் உணவு கொள்ளாதிருப்பவர் என்பதாம். இதனுல் மாதோபவாசம் கூறினார்.

131-132. இகலொடு செற்றம் நீக்கிய மனத்தினர்-பகைமையுடனே நெடுங்காலம் நிற்கும் சினத்தினையும் நீக்கிய மனத்தினை யுடையவர்,

செற்றம் - நெடுநாள் நிலைத்த கோபம்.

132-133. (யாவதுங், கற்றோ ரறியா வறிவினர்) கற்றோர் யாவதும் அறியா அறிவினர் - பலவற்றையுங் கற்றவர் சிறிதும் உணர மாட்டாத அத்துணை இயற்கைஞானம் படைத்தவர்,

(வி - ரை.) இயற்கைஞானம் - நூல்கள் பயிலாமலேயே தவ மகிமையினுல் நூல்களைச் செம்மையாகப் பயில்வதால் உண்டாகும் அறிவு முழுவதும் உள்ளத்தில் உதிக்கப் பெறுவது.

எவ் வகைப்பட்ட பொருள்களையும் கற்ற வல்லுநராலும் அறியப்படாத அறிவின் மிக்கார் என்பாருமுளர்.

133-134. கற்றோர்க்கு தாம் வரம்பு ஆகிய தலைமையர்-படித் துணர்ந்தவர்க்குத் தாம் எல்லையாகிய சிறப்பினையுடையவர்,

(வி - ரை.) தலைமை யுடையவர் எனினும் மிக்கோர் எனினும் பொருந்தும். இதனால் அவர்கள் கல்வியின் முடிவெல்லையைக் கண்டவர் என்பதைக் கூறினார் என்பதாம். கல்விக்கரை, வேதாந்தம் இனி யவர் ஓதி யுணர்வதற்கு எஞ்சிய தொன்றுமில்லை.

134-135. காமமொடு கடு சினம் கடிந்த காட்சியர் - அவாவுடன் கொடிய கோபத்தினையும் நீக்கிய அறிவினை யுடையவர்,

(வி - ரை.) காட்சியர், தோற்றத்தினை யுடையவர் என்றும் உரைப்பர்.

'ஒரு மொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே' என்பதனால், காமமும் வெகுளியுங் கூறியதனால் லோப மோக மத மாச்சரியங்களையும் அல்லது மயக்கத்தையும் உடன் கூறினார் என்க.

கோபம் முதலில் நிகழ்வது; அது சிறிது காலம் நீட்டித்து நிற்றலுக்குச் சினம் என்ப.

135-136. இடும்பை யாவதும் அறியா இயல்பினர் - தவத்தினால் மெய்வருத்தம் உண்டாயினும் மனத்தினால் வருத்தம் சற்றும் உணராத இயல்பினை யுடையவர்,

(வி - ரை.) தவத்திற்கு அழகு 'உற்ற நோன்றல்.' தவம் நோற்கும் போதுதான் மெய்வருத்தம் தோன்றும்; அதனைத் தவஞ் செய்வோர் பொறுப்பர்.

"இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதா மேல்." —(குறள்)

நாற்கதியினும் உள்ள உடம்புகள் துன்பம் என்னும் வாளுக்கு இலக்கென்று தெளிந்து தம்மேல் வந்த துன்பத்தைத் துன்பமாகக் கொள்ளார் அறிவுடையார்.

மேவர - திருவுள்ளம் பொருந்துதல் வரும்படி,

(வி - ரை.) முற்கூறப்பட்ட சிறப்புக்களெல்லாம் பொருந்த என்றும் உரைப்பர். மேவல் வர என்பது மேவர என மருவிற்று. வந்து என்பது வர என நின்றது, எச்சத்திரிபு.

137. துனி இல் காட்சி முனிவர் முன் புக - எவர்பாலும் வெறுப்பில்லாத நல்லறிவுடைய முனிவர்கள் முன்னே செல்ல,

(வி - ரை.) துனி இல் காட்சி, துயரம் இல்லாத தோற்றத்தினையுடையவராய் என்றும் உரைப்பர்.

இதுவன்றித்,

துனி இல் காட்சி முனிவர் மேவர முன் புக என்று கூட்டி வெறுப்பில்லாத அறிவினை யுடைய முனிவர் விருப்பமுற்று முன்னே செல்ல எனினும் பொருந்தும்.

முற்கூறியவற்றால் முனிவர் இயல்பு கூறினர்.

சீரை உடுக்கையர் நரை முடியினர் இமைக்கும் உருவினர் என்பெழுந் தியங்கும் யாக்கையர் கழிந்த உண்டியர் இகலும் செற்றமும் நீக்கிய மனத்தினர் கற்றோர் அறியா அறிவினர் வரம்பாகிய தலைமையர் காமமும் சினமுங் கடிந்த காட்சியர் இடும்பை அறியா இயல்பினர் ஆகிய முனிவர் மேவர முற்புக என முடிக்க.

'புகை முகந்தன்ன' முதல் 'மேவலர்' வரை ஒரு தொடர்.

138. புகை முகந்தன்ன மாசு இல் தூ உடை - பாலின் புகையை முகந்தாற் போன்ற தெய்வத்தன்மையால் அழுக்கேறாத தூய ஆடையினையும்,

(வி - ரை.) மாசு இல், குற்றமற்ற எனினும் அமையும். புகை முகந்து அன்ன, புகையைக் கையாலே முகந்தாற் போன்று நொய்யவாய என்பாருமுளர்.

139. முகை வாய் அவிழ்ந்த தகை சூழ் ஆகத்து - அரும்பு வாய் நெகிழ்ந்த மாலை சூழ்ந்த மார்பினையும்,

(வி - ரை.) அரும்பு வாய் நெகிழாத முன்னரே கட்டிய மாலையே சிறந்தது. ஏனெனின் கட்டிய பின்னர் அரும்பு மலர்ந்து மணமும் பொடியும் குறையாது நிற்கும் இதனால் 'மொட்டுக்களினுடைய வாய் விரிந்த பூவாலாகிய மாலை' - என்பது உரையன்மை காண்க.

தகை, அழகு, குணம், பெருமை; கட்டுதலில் மாலை அவற்றையுடையதால் அது மாலையை உணர்த்திற்று, ஆகுபெயர்.

முகை வாய் அவிழ்ந்த தகை, மொட்டுப்பூக் கிண்கிணி வாய்க்கொண்ட பக்குவத்திலே கட்டின மாலை என்பாரும் உளர்.

140 - 141. செவி நேர்பு வைத்த செய்வு உறு திவவின் நல்யாழ் நவின்ற - (மூவகைச் செவிகளிலும் தலையான கூரிய செவியாகிய) எஃகுச் செவியினால் சுருதியை அளந்து நரம்பைக் கட்டின சுற்றுந்தன்மை வாய்ந்த வார்க்கட்டு உடைய நல்ல வீணையின் இசையில் பயின்ற,

அன்றியும், 'செவிக்குப் பொருந்தவைத்த தொழில்களால் அமைந்த நரம்புக்கருவினையுடைய நல்லியாழினது சொற் பொருந்திய' என்றும் உரை காண்பர்.

141 - 142. நயன் உடை நெஞ்சின் மென்மொழி மேவலர் இன் நரம்பு உளர - இனிமை பொருந்திய மனத்தால் எப்போதும் மென்மையான மொழி பேசுதலைப் பொருந்திய கந்தருவர் இனிய நரம்பை வாசிக்க,

(வி - ரை.) பயின்ற நயன் எனக் கூட்டுக.

நயன் உடை நெஞ்சின், அன்புடைய மனத்தினையும் என்றும் உரைப்பர்; ஈரம் உடைய எனினும் பொருந்தும். மென்மொழி மேவலர், மெத்தென்ற சொல் சேர்ந்தோர்............வித்தியாதரர் என்றும் உரைப்பர்.

மேவலர், அன்பர் ஆகிய கந்தருவ ஆண்மக்களை உணர்த்தும்.

உளர என்பதை 'உளரி' யின் எச்சத்திரிபாகக்கொண்டு தடவி வாசித்து என்றும் பொருள் கூறுவர்.

'நோயின்று' முதல் 'மகளிர்' வரை ஒரு தொடர்.

143. நோய் இன்று இயன்ற யாக்கையர் - மாந்தருக்குரிய பிணி இல்லையாமாறு நிருமிக்கப் பெற்ற உடம்பினை யுடையவராய்,

(வி - ரை.) இயன்ற, பொருந்த எனினும் அமையும்.

143 - 44. மாவின் அவிர் தளிர் புரையும் மேனியர்-மாமரத்தின் விளங்கும் தளிரை யொத்த நிறத்தினை யுடையவராய்,

144 - 45. அவிர்தொறும் பொன் உரை கடுக்கும் திதலையர்-விளங்குந்தோறும் பொன்னுரைத்தாற்போலும் துத்தி என்னும் பொறியினை யுடையவராய்,

(வி - ரை.) துத்தி - தேமல்.

145 - 47. இன் நகை பருமம் தாங்கிய பணிந்து ஏந்து அல்குல் மாசு இல் மகளிரொடு - கண்களுக்கு இனிய ஒளி பொருந்திய பருமத்தைத் தரித்த தாழும் இடத்துத் தாழ்ந்து உயரும் இடத்து உயர்ந்த நிதம்பத்தினையுடைய குற்றமற்ற கந்தருவ மங்கையரோடே.

(வி - ரை.) பருமம் - பதினெண் கோவை.

அல்குல், மாதர்களின் மர்மஸ்தானம்; நடுவே தாழ்தலும் பக்கங்களில் உயர்தலும் உடையது. முற்கூறிய கந்தருவரின் மனைவியரோ ஈண்டுக் கூறிய மாசில் மகளிர் என்க.

இன்னகை, அழகிய ஒளி எனினும் அமையும்; பருமம், அரைப்பட்டிகை யென்பாரு முளர்.

மகளிர், தெய்வக் குறத்திகளோடே என்னும் பொருள் அத்துணைச் சிறப்பாகாதது காண்க.

மறு இன்றி விளங்க - குற்றம் இல்லாது விளங்க,

(வி - ரை.) இதற்கு 'முன் சொன்ன வித்தியாதராரும் இதற்கு உரித்தான மடந்தையரும் ஒழிய இதற்கு உரித்தல்லாத பேர்கள் கூடாதே விளங்கப்பட்டு' என்பாரும் உளர்.

தூவுடையினையும் ஆகத்தினையு முடைய மென்மொழி மேவலர் நோயின்றியன்ற யாக்கையினையும் தளிர்புரை மேனியினையும் பொன்னுரை கடுக்கும் திதலையினையும் பருமந்தாங்கிய பணிந்தேந்து அல்குலினையும் உடையவராய் மாசில் மகளிரொடு மறுவின்றி விளங்க இன்னரம்புளர என முடிக்க.

148. கடுவொடு ஒடுங்கிய தூம்பு உடை வால் எயிறு - விடத்துடனே உறைக்குள்ளே துளை பொருந்திய வெண்பற்களையும்,

(வி - ரை.) கடுவொடு ஒடுங்கிய, விஷத்தொடு சேர்ந்த எனினும் அமையும்.

மிடற்றில் நஞ்சு தோன்றுதலால் கடுவொடு என்றார். மிடறு-கழுத்து. கீழ்வாய்ப்பற்கள், காளி, காளாத்திரி, யமன், யமதூதி என நான்கு.

விட மொடுங்கி யோடப்பட்ட தொளை என்பாரும் உளர்.

149. அழலென உயிர்க்கும் அஞ்சுவரு கடு திறல்-நெருப்புப் போலும் நெட்டுயிர்ப்பு விடும் பார்ப்பவர்க்குப் பயம் தோன்றுங் கொடிய வலியினையு முடைய,

(வி - ரை.) கடு, கடிய, மிக்க எனினுமாம்.

150. பாம்பு பட புடைக்கும்-பாம்பு சாகும்படி அடிக்கும்.

150-51-பல் வரி கொடு சிறை புள் அணி நீள் கொடி செல்வனும் - பல வரிகளையும் வளைந்த சிறகினையு முடைய கருடனை அணிந்த நீண்ட கொடியினை யுடைய திருமாலும்,

(வி - ரை.) அணி, அழகாக எழுதப்பெற்ற எனினும் அமையும்.

151-54. (வெள்ளேறு, வலவயி னுயரிய பலர்புகழ் திணி தோளுமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண், மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனும்:)

வலம் வயின் வெள்ளேறு உயரிய - வெற்றிக்களத்தில் வெண்மையான இரஷபத்தை வெற்றிக்கொடியாக உயர்த்தியவனும்,

உமை அமர்ந்து விளங்கும் - உமாதேவி வலப்பாகத்தில் விளங்கப் பெற்றவனும்,

பலர் புகழ் திணி தோள் - பலரும் துதிக்கின்ற வலிய தோளினை யுடையவனும்,

இமையா முக்கண் - இமைத்தல் இல்லாத மூன்று கண்களை யுடையவனும்,

ஆகிய,

மூ எயில் முருக்கிய முரண் மிகு செல்வனும் - மூன்றுபுரங்களையும் எரித்த வலிமை மிகுந்த சிவபிரானும்,

(வி - ரை.) வெள் ஏறு வலவயின் உயரிய, வெள்ளை யிடபத்தை வெற்றியினால் ஏறிக்கொண்டு என்பாரு முளர்.

155. நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து - நூற்றைப்பத்து முறை அடுக்கிய கண்களையும்,

(வி - ரை.) ஆயிரங்கண் என்க.

155-56. நூறு பல் வேள்வி முற்றிய வென்று அடுகொற்றத்து - நூறாகிய பல வேள்விகளைச் செய்து முடித்ததனாற் பெற்றதும் பகைவரை வென்று சாகடிக்கின்றதும் ஆகிய வெற்றியினையும்,

(வி - ரை.) பல நூறு வேள்வி, பல வகையான நூறு யாகம் எனினும் அமையும்.

157. (ஈரிரண் டேந்திய மருப்பின்:) ஏந்திய ஈரிரண்டு மருப்பின் - தலையில் ஏந்தி யிருக்கும் நான்கு தந்தங்களையும்,

(வி - ரை.) அடியை உள்ளபடியே வைத்துக்கொண்டு நான்கு உயர்ந்த தந்தங்களையும் எனினும் அமையும்.

ஈரிரண்டு மருப்பின் ஏந்திய எழில் நடை என மேலே கூட்டி, நாலு கோட்டினையும் எடுத்து அழகியதாய்ச் செல்லப் பட்ட என்று கூறுவாரு முளர்.

எழில் நடை - அழகிய நடையினையும்,

158. தாழ் பெரு தடம் கை - நிலத்தில் கிடக்கும் பெரிய வளைவினையுடைய கையினையும் உடைய,

(வி - ரை.) பெருந்தடக்கை, நீண்ட பருத்த துதிக்கை என்றும், பெருத்த வலிய துதிக்கை என்றும் கூறினும் பொருந்தும்.

158-59. உயர்த்த யானை எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும் - யாவரும் உயர்த்துக் கூறும் வெள்ளை யானையின் புறக் கழுத்தில் ஏறிய திருமகள் விளங்கும் தேவேந்திரனும்,

(வி - ரை.) உயர்த்த என்பது உயர்ந்த என்பதின் விகாரமாகக் கொண்டு பொருள் கூறினும் அமையும்.

மேலே உயர்த்திய எனினும் பொருந்தும்.

திருக்கிளர் செல்வன், செல்வம் மிக்க இந்திரன் எனினும் அமையும்; அழகு விளங்குகின்ற என்று கூறுவாரு முளர்.

நூற்றுப் பத்தடுக்கிய நாட்டத்தினையும் வென்றடு கொற்றத்தினையும் உடைய திருக்கிளர் செல்வன் எனக் கூட்டுக.

சுரிரண் டேந்திய மருப்பினையும் எழில் நடையினையும் தடக்கையினையும் உடைய யானை என்க.

160-61. நால் பெரு தெய்வத்து நல் நகர் நிலைஇய உலகம் காக்கும் ஒன்று புரி கொள்கை - நான்கு பெரிய தெய்வங்களையுடைய நல்ல நகரங்கள் நிலைபெற்ற உலகத்தைப் பாதுகாக்கும் ஒப்பற்ற வேள்தொழிலையே விரும்பிய உறுதியையுடைய,

(வி - ரை.) நாற்பெருந் தெய்வங்கள் - இந்திரன், யமன், வருணன், குபேரன் என்ற திக்குப்பாலகர்கள்.

அன்றியும் அந்தணர் தெய்வம், அரையர் தெய்வம், வைசியர் தெய்வம், சூத்திர தெய்வம் என்பதைச் சிலப்பதிகாரத்துள் கண்டு கொள்க என்று கூறுவாரு முளர்; இஃது அத்துணைச் சிறப்புடைத் தன்றென்பதை உணர்க.

ஒன்றுபுரி கொள்கை, ஒருமைப்பாட்டினை யுடையராய் எனி னும் அமையும்.

162. பலர் புகழ் மூவரும் தலைவராக - பலரும் போற்றுகின்ற அயன் அரி அரன் என்னும் மூத்தேவர்களும் தத்தமக்குரிய தொழில்களை முன்னர்ப்போன்றே பெற்று இயற்றித் தலைவராகுமாறு,

(வி - ரை.) அயன் முருகக் கடவுளின் வேலின் திறத்தைப் பழித்தனன் ஆக அயனைப் பூமிக்குச் செல்லுமாறு முருகன் சபித்தருளினன். அதனால் படைப்புத்தொழில் நின்றுவிட்டது; படைப்புத்தொழில் நின்றதும் காத்தல் தொழிலும் அழித்தல் தொழிலும் முறையே நின்றுவிட்டன. அம் மூத்தொழிலையும் மூத்தேவரும் பெற்றுத் தலைவராக வேண்டி என்றார்.

'நாற்பெருந் தெய்வத்து.........கொள்கை' என்பது 'மூவ ரும்' என்பதற்கு அடை. அதுவன்றி 'உலகம் காக்கும்' என்ற தால் இது காத்தல் தொழில் குறிக்கின்றது; ஆதலின் அது புள் ளணி நீள் கொடிச் செல்வனாகிய திருமாலுக்கு அடையாக்குக என்பாரு முளர்.

163-65. (ஏமுறு ஞாலந் தன்னிற் றோன்றித், தாமரை பயந்த தாவி லூழி, நான்முக னொருவற் சுட்டி:)

ஞாலம் தன்னில் தோன்று ஏம் உறு நான்முகன் - முருகக் கடவுள் சபித்தலால் பூமியில் இறங்கி மயக்கமுறுகின்ற நான்கு முகங்களை யுடையவனும்,

தாமரை பயந்த ஊழி தா இல் ஒருவன் சுட்டி - திருமால் தன் உந்தித் தாமரை பெற்ற கற்ப காலந்தோறும் தனது சிருட் டித் தொழிலில் சிரமம் இல்லாத ஒப்பற்றவன் ஆகிய பிரமனைப் பண்டைய நிலையில் நிறுத்த நினைத்து,

(வி- ரை.) இன்பந் தருகின்ற உலகத்தில் வந்து திருமா லின் உந்தித்தாமரை அளித்த நெடுங்காலம் கெடுதல் இல்லாத ஆயுளையுடைய நான்கு முகங்களைக் கொண்ட பிரமதேவனாகிய ஒருவன் நிமித்தம் என்றும் உரைப்பர்.

அன்றியும் ஐயமிக வுடைத்தாய பூமியினிடத்திலே வந்து விளங்கித் தாமரைப்பூவின்கண் தோன்றிக் கேடில்லாத காலத் தினையுடைய நான்முகனாகிய அயனுக்காக முன்சொன்ன மூவரும் பூமியின்கண் வந்து தோன்றி என்றும் உரைப்பர்.

பயந்த ஒருவன் எனக் கூட்டுக.

சாபம் :—முருகப்பிரான் அசுரரை அழித்துத் தெய்வ யானையை மணக்குஞ் சமயத்துத் தன் கையில் உள்ள வேலை நோக்கி 'எல்லாம் இதனால்' என்றனனாகப் பிரமன் 'இவ்வேற்குச் சிறப்பு உற்றதெம்மால்' எனப் பிரம்மனைப் 'பூமிக்குப் போ' எனச் சபித்தான்.

இதல்லாது 'பிள்ளையார் அயனைச் சிறையிடுகையில் அவர் எழுந்தருளியிருக்கும் திருவாவினன்குடியிற் சென்று அயனை விடுவிக்கப் பூமியின்கண் வந்த' தென்று கொள்வாருமுளர்.

கண்வர - தன்னை வந்து தரிசிக்கவும்.

(வி - ரை.) காணவர என்பது காண்வர என நின்றது, இதனைத் தாமரை பயந்த ஒருவன் காண்வர எனச் சேர்த்து அயன் அழகு தோன்ற என்றும் உரைப்பர். காண்வர என்பதற்குக் காட்சி பெற என்றும் உரைப்பர். இதுவுமன்றி மேல் வரும் ஒன்பதிற்றிரட்டி.........பெறீஇயர்.........தோன்றலர்......செலவினர்.........திறலினர்......குரலினர் காண்வர எனக் கூட்டி, அவர்கள் அனைவரும் அழகொடு கூடி வரவும் என்றும் உரைப்பர்.

166. பகலில் தோன்றும் இகல் இல் காட்சி - ஒன்றினைப் பலவாகுமாறு பகுத்து ஆராயும்போது வேறுபடக் காணும் தம்முள் மாறுபாடில்லாத அறிவினை யுடைய,

(வி - ரை.) பகலாகிய அருக்கனைப் போலத் தோன்றா நின்ற என்று கூறுவாருமுளர். பகல் - ஆதித்தன், பகுத்தல். காட்சி, தோற்றம் என்றும் உரைப்பர்.

167. நால் வேறு இயற்கை பதினொரு மூவரொடு - நான்கு வகையாக வேறுபட்ட இயல்பினை யுடைய முப்பத்து மூவரும்,

(வி - ரை.) எனின் ஆதித்தன், உருத்திரன், வசு, மருத்துவன் என்பவற்றில் ஒவ்வொன்றையும் பலவாகப் பிரிக்குங் காலத்துப் பன்னிருவர், பதினொருவர், எண்மர், இருவர் ஆகும். அங்ஙனம் பகுக்க நான்கு வகையாகி முப்பத்துமூவராயினர் என்றவாறு அவர் முறையே ஆதித்தர், பன்னிருவர், உருத்திரர், பதினொருவர், வசுக்கள், எண்மர், மருத்துவர், இருவர் ஆவர், வேற்றுமை நான்காகிய தேவர் முப்பத்துமூவர் என்க.

இஃதன்றி 'நான்கு வேற்றுமைப்பட்ட இயல்பு பெற்ற' எனக் கூறி 'நால்வேறியற்கை—சாலோகம் சாமீபம் சாரூபம் சாயுச்சியம் என நின்ற நாலு வேற்றுமைப்பட்ட வியற்கை' என்பாரு முளர்.

ஒடு, எண்ணொடு.

168. ஒன்பதிற்று இரட்டி உயர் நிலை பெறீஇயர் - பதினெட்டு வகையாகிய உன்னத நிலையைப் பெற்ற கணங்களும்,

(வி - ரை.) பதினெட்டுக் கணங்கள் :—(1) தேவர், (2) அசுரர், (3) தைத்தியர், (4) கருடர், (5) கின்னரர், (6) கிம்புருடர், (7) இயக்கர், (8) விஞ்சையர், (9) இராக்கதர், (10) கந்தருவர், (11) சித்தர், (12) சாரணர், (13) பூதர், (14) பைசாசகணம், (15) தாராகணம், (16) நாகர், (17) ஆகாய வாசிகள், (18) போக பூமியோர்.

இதனை வேறு வரிசையாகவும் உரைப்பர். (1) தேவர், (2) சித்தர், (3) அசுரர், (4) தைத்தியர், (5) கருடர், (6) கின்னரர், (7) நிருதர், (8) கிம்புருடர், (9) கந்தருவர், (10) இயக்கர், (11) விஞ்சையர், (12) பூதர், (13) பைசாசர், (14) அந்தரர், (15) முனிவர், (16) உரகர், (17) ஆகாச வாசிகள் (18) போக பூமியர்கள்.

இனி இதற்குப் பதினெண் பூமியின் மிக்க பதங்களையும் பெற்றுடையவருமாய் என்பாரு முளர்.

169. மீன் பூத்தன்ன தோன்றலர் - வானத்தில் நட்சத்திரங்கள் பொலிவு பெற்றுத் தோன்றினாற் போலுந் தோற்றத்தினை யுடையவராய்,

169-70. மீன் சேர்பு வளி கிளர்ந்தன்ன செலவினர் - மீன்கள் சஞ்சரிக்கின்ற கடலினிடத்தைச் சேர்ந்து காற்றடித்தாற் போன்ற நடையினை யுடையவராய்,

(வி - ரை.) மீன் என்பது அது சஞ்சரிக்கும் இடமாகிய கடலுக் கானதால் ஆகுபெயர், இதனை நட்சத்திரமாகக் கொண்டு

அவற்றிற்கு இடமாகிய ஆகாயத்தில் காற்றடித்தாற் போன்ற என்று கூறுவாருமுளர். மின்னுடன் காற்றெழுந்தாற்போல் என்றும் கொள்வர்.

170-71. வளி இடை தீ எழுந்தன்ன திறலினர்-காற்றிலே நெருப்பெழுந்தாற் போன்ற சக்தியுடையவராய்,

171-172. தீ பட உரும் இடித்தன்ன குரலினர்-நெருப்புத் தோன்ற இடியேறு இடித்தாற் போலும் குரலினை யுடையவராய்,

இவை யாவும் வினைமுற்றெச்சங்கள்.

172-73. (விழுமிய, வுறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மார்:) தம் விழுமிய பெறுமுறை குறை உறுமருங்கில் கொண்மார் - தமது சிறந்த தொழிலைப் பழமைபோல அடையும் முறைமையைக் குறையிரந்து நின்று பெறுங் கூற்றினாலே முடித்துக் கொள்வதற்கு,

(வி - ரை.) தவங்களுக்கு உறுதியான குறைவற்ற இடங்களிலே தங்களால் பெற' வேண்டிய தொழில்களைக் கொண்டிருப்பான் வேண்டி என்பாரும் உளர்.

174. அந்தரம் கொட்பினர் - வானத்தில் வட்டமிட்டவராய்,

(வி - ரை.) ஆகாசத்தில் மின்னுகின்ற கோட்பாட்டினை யுடையவராய் என்றும் உரைப்பர்.

(வந்துடன் காண:) உடன் வந்து காண - திரண்டு வந்து காணுமாறு,

175. தா இல் கொள்கை மடந்தையொடு - வருத்தமில்லாத அருட்கற்புடைய தெய்வயானையாருடனே,

(வி - ரை.) குற்றமற்ற அல்லது கேடில்லாத கற்பு அல்லது கொள்கை எனினும் பொருந்தும்.

175-76. (சின்னாள், ஆவினன்குடி யசைதலு முரியன்:) ஆவினன்குடி சின்னாள் அசைதலும் உரியன் - ஆவினன்குடி என்னும் திருப்பதியின் கண் சில தினங்கள் எழுந்தருளி யிருத்தலையும் (முருகக் கடவுள்) உரியன்,

அதா அன்று - அதுவன்றி,

சித்தன்வாழ் என்றும் ஆவினன்குடி என்றும் பழநி என்றும் வழங்கா நிற்கும்.

ஐயன் முனிவுகொண்டிருத்தல்பற்றிச் சாந்தசொரூபிகளாகிய முனிவர் முனிவு தீர்க்க முன்னர்ச் சென்றனர். கந்தருவர் தமது பாட்டினாலும் முனிவு தீர்க்க முனிவரின் பின்னால் தொடர்ந்தனர்.

பலர் புகழ் மூவரும் தலைவராதற்கு அத் தலைமைக்குக் குறைவுண்டாகிய நான்முக வொருவற் சுட்டிப் புள்ளணி நீள்கொடிச் செல்வனும் மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும் யானையெருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும் ஒன்றுபுரி கொள்கையினராய் முப்பத்துமூவரும் ஒன்பதிற்றிரட்டிக் கணங்களும் மீன்பூத்தன்ன தோன்றலர் வளிகிளர்ந்தன்ன செலவினர் தீயெழுந்தன்ன திறலினர் உருமிடித்தன்ன குரலினர் அந்தரக் கொப்பினராய் உடன் வந்து தம் உறுகுறை பெறும் முறைகொண்மார் மென்மொழி மேவலர் இன்னரம் புளரத் துனியில் காட்சி முனிவர் மேவர முற்புகக் காண்வரத்தான் ஆவினன்குடியில் அசைதலும் உரியன் என முடிக்க.

## முத்தேவர் முதலானோரின் சித்திரம்

வானத்தினின்றும் பூமிக்கு இறங்கும் மூவர், முனிவர் கந்தருவர் முதலானோரின் வருணனை ஓர் சிறந்த ஓவியமாகும். ஓவியத்தின் நடுநாயகம் முத்தேவராகும். அவர்களின் வண்ணத்திற் கேற்ப நக்கீர ஓவியன் இடந் தருகின்றனன். நீலவண்ணமுடைய திருமாலையும் ஆயிரங்கண்களின் பொலி

வாற் கரிய நிறத்தவனாகிய இந்திரனையும் அடுத்தடுத்து வைத்தால் படம் பாடுபெறாது. இக்காலத்தில் புகைப்படம் எடுப்பவரும் தேக உடைகளின் வண்ணங்களுக் கேற்ப நிறுத்துகின்றனர். கறுப்பு வண்ண உடையினர் இடையிடை வெள்ளுடையினரை நிறுத்துகின்றனர். இன்றேல் கறுப்பும் கறுப்பும் வெண்மையும் வெண்மையும் பக்கம் பக்கமாக நிறுத்தினால் படம் இருட்டாகவும் உருவிளங்காத ஒரே வெண்மையாகவும் கெட்டுப் போதலைப் பார்க்கின்றோம். ஆதலின் ஈண்டுப் பொன்னொளி மேனியனாகிய சிவபெருமானைக் கறுப்பர்களாகிய மாலுக்கும் இந்திரனுக்கும் இடையே வைத்தான். இது வண்ணத்தைக்குறித்து மட்டுமன்றித் தலைமை நோக்கியும் இவ்விதம் வைத்தனன் போலும். தலைமையுடையவரை விளக்கமாகத் தீட்டி இல்லாதவரை ஒருவாறாகத் தீட்டுதல் ஓவியத்தின் இயல்பு. திருமாலுக்கு முன்னால் அவனது சிறப்பு விளக்கக் கந்தருவரையும் அவர்களது பெண்டிரையும் வைத்தான். ஆயினும் அவர்களது உடற் சித்திரத்தை அத்துணைச் சிறப்பாக எடுத்துக் காட்டவில்லை. கந்தருவர்களுக்கும் எல்லோருக்கும் முன்னால் சாந்தசொரூபிகளாகிய முனிவர்களை அவர்களுடைய தோற்றத்தை உள்ளது உள்ளவாறே வரைந்தான் ஓவியன். மேலும் முருகக் கடவுளின் சினம் முனிவர்கள் சாந்தத் தோற்றத்தால் நீங்கும். முற்றிலும் நீக்குவதற்குக் கந்தருவரின் இன்னரம்போசை பின்னால் வருகின்றது. ஈண்டுக் கோபம் முற்றிலும் ஆறிய பின்னரே மூவரின் தலைமை பெறும் காரியம் முருகனால் சித்தியாகும். இந்திரனுக்குப் பின்னால் வரும் கணங்களின் உருவங்களைத் தொடவே இல்லை. அவர்கள் தத்தமது தலைவர்களைத் தொடர்வதற்குரிய அவர்களது விரைவின் தன்மையையே குறித்தான். தொண்டு புரிவார்தம் இயல்பினையே வரைந்தான். உறுப்புக்களின் தன்மையைத் தீண்டவே இல்லை. இனிச் சித்திரக்காரன் அமைத்த பொது அமைப்பினையும் தனித்தனி அமைப்பினையும் பயில்வோர் உட்புகுந்து கண்டு கொள்க.

---

## 4.—திருவேரகம்

இருமூன் றெய்திய இயல்பினின் வழாஅ
திருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான் கிரட்டி இளமை நல்லியாண்
டாறினிற் கழிப்பிய அறன்நவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்
திருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர உடீஇ
உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்
தாறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி
நாவியன் மருங்கின் நவிலப் பாடி
விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிதுவந்
தேரகத் துறைதலும் உரியன் அதாஅன்று

## 4.—திருவேரகம்

### (பொழிப்புரை)

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் எனும் ஆறு நலம் பொருந்திய இலக்கணத்தின் வழுவாது தாய்வழியிலும் தந்தைவழியிலும் நன்கு மதிக்கப் பெற்ற பல்வேறு வகையான பழைய குடிகளில் பிறந்தவரும், நாற்பத்தெட்டு வருடம் வேதங்களில் கூறியவாறு நல்ல இளமையைப் பிரமசரியங் காத்தவரும், தருமத்தை எப்பொழுதும் இயம்புகின்ற கோட்பாட்டினையும் சதுரம், முக்கோணம், வில்வடிவம் என மூன்று வகையாகச் சொல்லப்பட்ட ஆகவ நீயம், தக்கிணாக்கினி, காருகபத்தியம் என்னும் மூன்று தீயினால் உண்டாகும் செல்வத்தினையும் உடையவரும் ஒன்பது நூலுடைய முப்புரியாகிய பூணூலை உடையவரும் ஆகிய அந்தணர்கள் தொழுதற்கு உரிய நேரம் உணர்ந்து தோத்திரஞ்

களைக் கூறத் தோய்த்த துணியை உடம்பிலே இடந்து உலருமாறு உடுத்து, உச்சியிலே குவிந்த இரு கரங்களையும் உடையவராய்த் தன்னை (முருகக்கடவுளைப்) புகழ்ந்து ஆறெழுத்துக்களைக்கொண்ட நமோகுமாராய என்னும் அரிய வேதமந்திர மொழியை நாக்கு மட்டும் புடைபெயரும் அளவில் நன்றாகப் பயில உச்சரித்து, வாசனை மிகுந்த நல்ல மலர்களை எந்தி நிற்கப் பெரிதும் மகிழ்ந்து திருவேரகத்தின் கண்ணே எழுந்தருளி யிருத்தலையும் உரியன், அதுவன்றி—

## இதன் பொருள்

## 4.—திருவேரகம்

177. இரு மூன்று எய்திய இயல்பினின் வழாஅது - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறு நலம் பொருந்திய இலக்கணத்தி னின்றும் தவறாமல்,

(வி - ரை.) இலக்கணம், ஒழுக்கம், அதிலைதிகாசாரம்.

178. இருவர் சுட்டிய பல் வேறு தொல் குடி - தாய் தந்தையர் இருவர் வழிகளிலும் நன்கு மதிக்கப்பெற்ற பல்வேறு வகையான பழைய குடிகளில் பிறந்த (இருபிறப்பாளர்),

(வி - ரை.) தாய் வழியில் ஏழு தலைமுறைக்கு உட்படாதவளும் தந்தைவழியில் பிறவாதவளும் ஆகிய ஒருவளை ஒருவன் மணத்தல் என்னும் விதியினைக் குறிப்பார், 'பல்வேறு தொல்' குடி என்றார்.

179-80. (அறுநாள் கிரட்டி யிளமை நல்லியாண், டாறினிற் கழிப்பிய:) அறுநான்கு இரட்டி ஆண்டு நல்லிளமை ஆறினில் கழிப்பிய - இருபத்துநான்கினை இரட்டிய நாற்பத்தெட்டு வருடம் வரை நல்ல இளமையைப் (பிரம்மசரியங் காத்தலாகிய) வேதங்கள் சொல்லும் வழியிலே கழித்த (இருபிறப்பாளர்),

அறன் நவில் கொள்கை - தருமத்தை எப்பொழுதும் இயம்புகின்ற கோட்பாட்டினையும்,

(வி - ரை.) அறன் நவில் கொள்கை ஆறினில் கழிப்பிய, "தருமசாத்திரங்களை யோதி இந்தக் கோட்பாட்டுடனே வியாகரணம், சோதிடம், நிருத்தம், சிக்ஷை முதலியன பயின்று, சைவம், பாசுபதம், சுத்தம், சாவித்திரியங்கள், ஆறுமுகம் என்று சொல்லப்பட்ட ஆறு சமயங்களினும் கழித்துச் சந்தேவியம்" என்பாருமுளர்.

181. மூன்று வகை குறித்த முத்தீ செல்வத்து - சதுரம், முக்கோணம், வில்வடிவம் என மூன்றுவகையாகச் சொல்லப்பெற்ற ஆகவநீயம், தக்கிணாக்கினி, காருகபத்தியம் என்னும் மூன்று தீயினால் உண்டாகும் செல்வத்தினையும்,

(வி - ரை.) ஒன்று வேதத்தை வழங்கவும், ஒன்று தேவர்கட்குத் தட்சணை கொடுக்கவும், ஒன்று பூலோகத்தை இலட்சை பண்ணவும் இவ்வாறாய மூன்று அக்கினிச் செல்வத்து என்பாரும் உளர்.

182. இரு பிறப்பாளர் - அந்தணர்,

(வி - ரை.) உபநயனம் முன்னர் ஒன்றும் ஆன பின்னர் ஒன்றும் ஆகிய இரு பிறப்பு என்க.

பொழுது அறிந்து நுவல - தொழுதற்குரிய நேரம் உணர்ந்து தோத்திரங்களை உச்சரிக்க,

(வி - ரை.) இதற்கு உதயகாலத்தும் மத்தியானகாலத்தும் அந்திமனகாலத்தும் தாபனம், அநுட்டானம், பூசை செய்வதறிந்து இந்த மூன்று காலத்திலே மூன்று தொழிலையும் முயன்று செய்ய என்பாருமுளர்.

183. ஒன்பது கொண்ட மூன்று புரி நுண் ஞாண்-ஒன்பது நூலைத் தன்னிடத்துடைய ஒருபுரி மூன்று ஆகிய நுண்ணிய பூணூலையும்,

(வி - ரை.) ஒன்பது, மூன்று நூலைக்கொண்டு மூன்று புரி ஆக்குதலால், மூன்றுபுரி (முப்புரி) மூவிழைகள் ஒன்றாகச் சேர்த்து முறுக்கப்படும் நூல். முப்புரியாக முறுக்கின வடத்தை மும் மூர்த்தியாகக்கொண்டு இதற்கு ஒன்பது இழையையும் நவசக்தி யாகக் கொண்டு என்று கூறுவாரும் உண்டு.

நுண்ஞானியினையும் அறன் நவில் கொள்கையினையும் மூத்தீச் செல்வத்தினையும் உடைய இருபிறப்பாளர் என்க.

184. புலரா காழகம் புலர உடீஇ - ஸ்நானஞ் செய்து தோய்த்த துணியை உடம்பிலேயே கிடந்து உலறுமாறு உடுத்து,

(வி - ரை.) ஈரத்துணி யுடனிருந்துதான் வழிபடுதல் உத்த மம் போலும்.

185. உச்சி கூப்பிய கையினர் தன் புகழ்ந்து - உச்சியிலே குவித்த இரு கரங்களையும் உடையவராய்த் தன்னைப் புகழ்ந்து,

(வி - ரை.) தற்புகழ்ந்து உச்சி கூப்பிய, பிள்ளையார் (முரு கன்) சீர்பாதத்தை நினைந்து தலைமேற் கை குவித்த எனினும் அமையும்.

186. ஆறெழுத்து அடக்கிய அருமறை கேள்வி - ஆறு எழுத்துக்களைத் தன்னிடத்தே கொண்ட கேட்பதற்கரிய மறை வாக உச்சரிக்கப்பெறும் திருமந்திரத்தை,

(வி - ரை.) அரிய வேத மந்திரம் எனினும் பொருந்தும். அது நமோகுமாராய அல்லது குமாராய நம: ஆறு அக்ஷரத்தைத் தன்னிடத் தடக்கிய வேதாகமங்களை எனப் பொருள் கூறி, 'ஆறு திருவெழுத்துங் கூறு நிலை கண்டு' என்று பிறர் கூறியதை எடுத் துக்காட்டாகக் கொள்வாரும் உளர்.

187. நா இயல் மருங்கில் நவில பாடி - நாக்குமட்டும் புடை பெயரும் அளவில் நன்மையாகப் பயில உச்சரித்து,

(வி - ரை.) நாவால் இயன்ற இடத்திலே கைவர வோதி என்பாரும் உளர், நவிலப்பாடி என்பதற்குப் பலமுறையாக உச்சரித்து எனினும் பொருந்தும்.

188. விரை உறு நறு மலர் ஏந்தி - வாசனை மிகுந்த நல்ல மலர்களை ஏந்தி நிற்க,

(வி - ரை.) இதற்குத் தேனை யுற்ற நறு நாற்றங்களையுடைய திருப்பள்ளித் தாமங்களை ஏந்திக்கொண்டு என்பாரு முளர்.

188-89. பெரிது உவந்து ஏரகத்து உறைதலும் உரியன்- பெரிதும் மகிழ்ந்து திருவேரகம் என்னும் திருப்பதியின்கண்ணே எழுந்தருளி யிருத்தலையும் உரியன்,

இருபிறப்பாளர் புலராக்காழகம் புலரவுடீஇத் தற்புகழ்ந்து உச்சிக் கூப்பிய கையினராய் ஆறெழுத்து அருமறைக் கேள்வி நவிலப் பாடிப் பொழுதறிந்து நுவலப் பெரிதும் மகிழ்ந்து ஏரகத் துறைதலும் உரியன் என முடிக்க.

அதா அன்று - அதுவன்றி,

இது சோழநாட்டில் கும்பகோணத்திற்கு இரு நாழிகை வழித் தூரத்தில் உள்ள சுவாமிமலையாகும். இங்குத்தான் முருகக் கடவுள் பிரமனைச் சிறையிட்ட பின்னர்ச் சிவபெருமானுக்குப் பிரணவப்பொருள் உபதேசித்தது. இதனை மலைநாட்டுத் திருப்பதி என்பாருமுளர்.

---

## 5.—குன்றுதோறாடல்

பைங்கொடி நறைக்காய் இடையிடுபு வேலன்
அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளந் தொடுத்த கண்ணியன்
நறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பிற்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கள் தேறல்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை அயர
விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
இணைத்த கோதை அணைத்த கூந்தல்
முடித்த குல்லை இலையுடை நறும்பூச்
செங்கான் மராஅத்த வாலிணர் இடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகாழ் அல்குல் திளைப்ப உடீஇ
மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு
செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடியன் நெடியன் தொடியணி தோளன்
நரம்பார்த் தன்ன இன்குரல் தொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல்
மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையின் இயல ஏந்தி
மென்றோள் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதோ றாடலும் நின்றதன் பண்பே அதாஅன்று

## 5—குன்றுதோறாடல்

(பொழிப்புரை)

நறுமணம் உள்ள சந்தனம் பூசிய நிறம் விளங்குகின்ற மார்பினையுடைய கொடியதொழிலைச் செய்ய வல்ல வலிய வில்லால் கொலை செய்த குறவர் ஆனவர், நீண்ட மூங்கில் துளைகளில் இருந்து முற்றின தேறல் செய்த கள்தெளிவை மலையிடத்தில் உள்ள சிறிய ஊரில் சுற்றத்தாருடன் உண்டுகளித்துத், தொண்டகம் எனும் சிறிய குறிஞ்சிநில வாச்சியத்தை அடித்து அதன் தாளத்திற்கு ஏற்பக் குரவைக் கூத்தாட,

முருகபூசை செய்யும் வேலனானவன் பச்சிலைக் கொடியால் நறுமணமுடைய சாதிக்காயும் நடுவிலிட்டு அழகிய பொதிதலையுடைய தக்கோலக்காயைக் கலந்து காட்டுமல்லிகையுடன் வெண்டாளிப்பூவையுங் கட்டின தலைமாலையை யுடையவனாய்;

விரல் தடவி வலிய மலர்த்த மலர்ந்ததால் வேறுபடும் நறு நாற்றத்தைக் கொண்ட ஆழ்ந்த சுனையில் மலர்ந்த மலரால் கட்டிய வண்டுகள் மொய்க்கின்ற தலைமாலையினையும், இதழ்பறித்துத் கட்டிய மாலையினையும், சேர்த்து முடிக்கப் பெற்ற கூந்தலினையும், இலையைத் தலையில் தரித்த கஞ்சாவினையும், இலைகளை யிடையிடையே உள்ள நறுமணம் வாய்ந்த பூங்கொத்துக்களையும், சிவந்த காம்பினை யுடைய கடம்பினது வெள்ளிய கொத்துப் பூக்களை நடுவே வைத்து வண்டுகள் தேனைப் பருகும் வண்ணம் தொடுத்த பெரிய குளிர்ந்த அழகிய தழையைத் திருந்திய வடங்கள் பொருந்திய நிதம்பத்தினிடத்தே அசையுமாறு உடுத்துச் சாயலுடைமையால் மயிலைப் பார்த்தாற் போன்ற மடமை பொருந்திய நடையினையுடைய மங்கையரொடு;

சிவந்த மேனியனாய்ச் சிவந்த ஆடை யுடையவனாய்ச் சிவந்த அரையினை யுடைய அசோக மரத்தின் குளிர்ந்த தளிர்கள் அசைகின்ற செவிகளை யுடையவனாய்க் கச்சைக் கட்டித் திருக் கழ

லணிந்து வெட்சி மாலை சூடிக் குழலூதிக் கொம்புக் குறித்துச் சிறிய பல வாச்சியங்கள் முழக்கி ஆட்டுக்கடாவைப் பின்னிட்டு மயிலை யேறிக் குற்ற மற்ற அழகிய சேவற் கொடியை உயர்த்து நெடுக உயர்ந்து தோளில் தொடி யென்னும் அணி யணிந்து யாழின் நரம்பு ஒலித்தாற்போலும் இனிய குரல் பொருந்திய பாடன் மகளிர்க் கூட்டத்துடன் இடுப்பில் இறுகக் கட்டின உதரபந்தத்தின் மேலே உடுத்துதற்குரிய தொங்கவிட்டதால் நிலத்தில் பொருந்தி மணமுடைய குளிர்ந்த அழகிய மெல்லிய துணியை யுடுத்து, மெல்லிய தோள்களை யுடைய பல பிணைமான் போலும் மங்கையர் குரவைக் கூத்தாடி அசையத் தனது மத்தளம் ஒத்த பெரிய கையினால் அவர்கள் கையினைத் தழுவி யேந்திக் கொண்டு முதற்கை கொடுத்து ஒவ்வொரு மலையிலும் போய் விளையாடுதலும் எப்போதும் தனக்கு நிலைபெற்ற குணமாம், அதுவன்றி—

## இதன் பொருள்

## 5.—குன்றுதோறாடல்

190. பைங்கொடி - பச்சிலைக் கொடியாலே,

நறை காய் - நறுமணமுடைய சாதிக்காயும்,

இடை இடுபு - மத்தியிலிட்டு,

வேலன் - முருகபூசை செய்யும் வெறியாடுவான்,

(வி - ம.) வேலன், படிமத்தான், வெறியாடுவான், தே[redacted]ராளன் எல்லாம் ஒரு பொருளன. பூசை செய்யும்போது தெய்வ ஆவேசம் கொள்பவன் என்பது பொருள்.

191. அம் பொதி புட்டில் - அழகிய பொதிதலையுடைய தக்கோலக் காயை,

(வி - ம.) பொதிதல் - மூடுதல். புட்டில் போன்றிருத்தலின் தக்கோலக்காயைப் புகட்டில் என்றார், உவம ஆகு பெயர்; புட்டில் - கூடை.

விரைஇ - கலந்து,

(வி - ரை.) இலை விரவி என்பாரு முளர்.

குளவியொடு - காட்டு மல்லிகையுடன்,

(வி - ரை.) தாளிப்பூவொடு என்பாரு முளர்.

192. வெள் கூதாளம் தொடுத்த கண்ணியன் - வெள்ளைக் கூதாளப் பூவையுங் கட்டின தலைமாலையை யுடையவனாய்,

(வி - ரை.) வெண்தாளி எனினும் அமையும்.

193. நறு சாந்து அணிந்த கேழ் கிளர் மார்பின் - நறு மணம் உள்ள சந்தனம் பூசிய நிறம் விளங்குகின்ற மார்பினை யுடைய (வேலவன்),

(வி - ரை.) வேலன் பைங்கொடி புட்டில் விரைஇ நறைக் காய் இடையிடுபு குளவியொடு கூதாளத்தையுங் கட்டிய கண்ணிய னாய் எனக் கூட்டுக.

கண்ணியன் குறிப்பு வினைமுற்றெச்சம்.

194. கொடு தொழில் வல்வில் கொலைஇய கானவர் - கொடிய தொழிலைச் செய்யவல்ல வலிய வில்லால் கொலை செய்த குறவர்,

(வி - ரை.) கானவர், வேட்டர் எனினும் பொருந்தும்.

வல்வில் குலைஇய கானவர் என்ற பாடம் ஓதின், வலிய வில்லை வளைத்த வேடர் என்க. எனவே கொலைத்தொழில் அடங்கப் பெற்ற தென்க.

195. நீடு அமை விளைந்த தேன் கள் தேறல் - நீண்ட மூங்கில் துளைகளில் இருந்து முற்றின தேனாற் செய்த கள்ளின் தெளிவை,

(வி - ரை.) நெடிய மூங்கிலரிசியில் உண்டாகச் சமைத்திட்டு இனிமைக் கிடமாகிய மதுவை என்பாரும் உளர்.

இதற்குத் தேம் கண் எனப் பிரிக்கவேண்டும்.

அமை, இங்கு அதில் விளையும் அரிசிக்கானதால் ஆகு பெயர்.

தேம் - இனிமை, கண் - இடம்.

196. குன்றகம் சிறு குடி கிளையுடன் மகிழ்ந்து - மலையிடத்தில் உள்ள சிறிய ஊரில் சுற்றத்தாருடன் உண்டுகளித்து,

(வி - ரை.) குடி, குலம், அதனையுடைய ஊருக்கானதால் ஆகுபெயர்.

197. தொண்டகம் சிறு பறை குரவை அயர - தொண்டகம் என்ற சிறிய குறிஞ்சிநில வாத்தியத்தை அடித்து, அதன் தாளத்திற்கு ஏற்பக் குரவைக் கூத்தாட,

(வி - ரை.) குரவை என்பது கைகோத்தாடுங் கூத்து.

கானவர் தேறல் (உண்டு) மகிழ்ந்து குரவை ஆட எனக் கூட்டுக.

198-99. விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற், குண்டு சுனை பூத்த வண்டுபடு கண்ணி:

விரல் உளர்ப்பு அவிழ்ந்த வேறுபடு நறு கால் - விரல் தடவுதலால் வலிய மலர்த்த மலர்ந்த பூவாகலின் வேறுபடுகின்ற நறு நாற்றத்தைக் கொண்ட,

குண்டு சுனை பூத்த வண்டு படு கண்ணி - ஆழ்ந்த சுனையில் மலர்ந்த மலரால் கட்டிய வண்டுகள் மொய்க்கின்ற தலைமாலையினையும்,

(வி - ரை.) வேறுபடு நறுங்கால், பலவகைப்பட்ட நறு நாற்றத்தைப் பொருந்திய தாளினையுடைய என்பாரு முளர்.

குண்டு - ஆழம். கார்க் குண்டுசுனை என்று பாடம் ஓதின் கரிய ஆழ்ந்த சுனை என்க.

200. இணைத்த கோதை - இதழ் பறித்துக் கட்டின மாலையினையும்,

அணைத்த கூந்தல் - சேர்த்து முடிக்கப்பெற்ற கூந்தலினையும்,

(வி - ரை.) நறுங்கால் குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி இணைத்த கோதை அணைத்த கூந்தல் என்று அப்படியே ஓதி, நறு மணம் பொருந்திய தாளினையுடைய ஆழமாகிய சுனையிலே யலர்ந்த வண்டு தங்குகின்ற பூக்களைத் தொடுத்த மாலை சேர்த்தின கூந்தலினையுடைய என்பாருமுளர்.

201. முடித்த குல்லை - இலையைத் தலையில் தரித்தக் கஞ்சாவினையும்,

(வி - ரை.) "கஞ்சங்குல்லை கஞ்சாவாகும்," திவாகரம்.

முடித்தாற் போன்ற கஞ்சம் என்பாருமுளர்.

முடித்த, இலைகளை மேலே கட்டிய எனினும் அமையும்.

இலை உடை நறு பூ - இலைகளை இடையிடையே உள்ள நறு மணம் வாய்ந்த பூங்கொத்துக்களையும்,

(வி - ரை.) வெறும் பூக்கள் என்பது உரையன்மை யறிக, இலைகள் இடையே உள்ளதால்.

202 - 03. செங்கால் மரா அத்த வால் இணர் இடை இடுபு சுரும்பு உண தொடுத்த பெரு தண் மா தழை - சிவந்த காம்பினையுடைய கடம்பினது வெள்ளிய கொத்துப்பூக்களை நடுவே வைத்து வண்டுகள் தேனைப் பருகும் வண்ணம் தொடுத்த பெரிய குளிர்ந்த அழகிய தழையை,

(வி - ரை.) செங்கால் மரா அத்த வால் இணர், நேரான அடிப்பாகத்தையுடைய வெண்கடப்ப மரத்திடத்திலுள்ள வெண்

மையான கொத்துக்களை எனினும் பொருந்தும். ஈண்டுச் செங்கால் என்பது இணருக்கு அடையாகாது மராஅத்துக்கானது.

மா, சிறந்த எனினும் அமையும்.

குல்லையையும் பூவையும் வாலிணர் இடையிட்டுத் தொடுத்த மாதழை என்க.

204. திருந்து காழ் அல்குல் திளைப்ப உடீஇ - சேர்வதால் திருந்தப்பெற்ற வடங்கள் பொருந்திய நிதம்பத்தின் இடத்தே அசையுமாறு உடுத்து,

(வி - ரை.) அல்குற் றிளைப்ப என்பது அல்கு றிளைப்ப என நின்றது, செய்யுள் விகாரம்.

திருந்து காழ், அழகிய புடவை பொருந்திய என்பாரு முளர்.

205. மயில் கண்டன்ன மடநடை மகளிரொடு - சாயலுடைமையால் மயிலைப் பார்த்தாற் போன்ற மடமை பொருந்திய ஒழுக்கத்தினை யுடைய மங்கையரொடு,

(வி - ரை.) மயில் நடையினைக் கண்டாற் போன்ற மெல்லிய நடையினை யுடைய பெண்களையும் எனினும் பொருந்தும்.

தழையை யுடுத்து மயில்கண்டன்ன மகளிர் எனக் கூட்டுக.

கண்ணியினையும், கோதையினையும், சேர்த்தின கூந்தலினையும், மடநடையினையும் உடைய மகளிர் எனக் கூட்டுக.

இந்த மகளிர் முருகக்கடவுளைச் சேவிப்பர் என்றுணர்க.

206. செய்யன் - சிவந்த தேகத்தினனாய்,

(வி - ரை.) சிவந்த நிறத்தவனாய் எனினுமாம்.

206 - 207. சிவந்த ஆடையன் செ அரை செயலை தண் தளிர் துயல் வரும் காதினன் - சிவந்த ஆடையுடையவனாய்ச் சிவந்த அடிப்பாகத்தினை யுடைய அசோகமரத்தின் குளிர்ந்த தளிர்கள் அசைகின்ற செவிகளை யுடையவனாய்,

(வி - ரை.) செவ் வரை செயலை, சிவந்த மலை யசோகின் என்பாரும் உளர்.

208. கச்சினன் கழலினன் செச்சை கண்ணியன் - கச்சையைக் கட்டித் திருக்கழலை யணிந்து வெட்சிமாலையைச் சூடி,

209. குழலன் கோட்டன் குறுபல் இயத்தன் - குழலையூதிக் கொம்பினைக் குறித்துச் சிறிய பல வாச்சியங்களை முழக்கி,

210. தகரன் மஞ்ஞையன் புகர் இல் சேவலங்கொடியன் - ஆட்டுக்கடாவைப் பின்னிட்டு மயில் ஏறிக் குற்றமற்ற அழகிய சேவற்கொடியை உயர்த்து,

நெடியன் - நெடுக உயர்ந்து,

(வி - ரை.) பிள்ளையா யிருப்பினும் தான் வேண்டும்போது வேண்டிய உருவம் கொள்பவன்.

தொடி அணி தோளன் - தோளில் தொடி என்னும் ஆபரணம் அணிந்து,

212. நரம்பு ஆர்த்தன்ன இன்குரல் தொகுதியொடு-யாழின் நரம்பு ஒலித்தாற்போலும் இனிய குரல் பொருந்திய பாடும் மகளிர்க் கூட்டத்துடன்,

(வி - ரை.) நரம்பு என்பதனை ஆகுபெயராய் யாழ் எனக் கொள்ளினும் அமையும்.

213-214 (குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன், மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன் :)

மருங்கில் கட்டிய குறும்பொறி கொண்ட - இடுப்பில் இறுகக் கட்டின உதரபந்தத்தின் மேலே உடுத்திக் கொள்வதற்குரிய,

நிலன் நேர்பு நறு தண் சாயல் துகிலினன் - தொங்கவிட்டதால் நிலத்தில் பொருந்தி மணமுடைய குளிர்ந்த அழகிய துணியை யுடுத்து,

(வி - ரை.) சாயல் - அழகு; நுண்மையாகக் கொண்டு மெல்லிய துகில் எனினும் பொருந்தும்; நிறம் எனினும் அமையும்.

இதுவன்றி மருங்கில் கட்டிய குறுபொறிகொண்ட நறுதண் சாயல் நிலன் நேர்பு துகிலினன் என்று அன்வயப்படுத்தி இடுப்பில் இறுகக் கட்டுதற்குரிய சிறிய பொறி பொருந்தியதும், வாசனையும், குளிர்ச்சியும், நிறமும், பொருந்தியதும் ஆகிய இந்திர நீலத் திருப் பரிவட்டத்தினை உடுத்தி என்றுங் கொள்வர். இங்கு நீலம் என்பது முதற்குறைந்து நிலம் ஆகி மீண்டும் நிலன் என இறுதிப் போலியாக நின்றது.

215-216. (முழவுறழ் தடக்கையி னியல வேந்தி, மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து :)

மெல் தோள் பல் பிணை இயல - மெல்லிய தோள்களையுடைய பல பிணைமான் போலும் மங்கையர் குரவைக் கூத்தாடி அசைய,

(வி - ரை.) குரவை என்ப தெழுவர் மங்கையர்
செந்நிலை மண்டலக் கடகக் கைகோத்
தந்நிலைக் கொட்பநின் றாட லாகும்.

பிணை மான் - பெண்மான்.

இவர்கள் உடல் தீண்டி விளையாடுதற்குரிய மங்கையர் ஆவார்.

முழவு உறழ் தடம் கையின் தழீஇ ஏந்தி தலைத்தந்து - தனது மத்தளம் போன்ற பெரிய கையினால் அவர்களது கையினைத் தழுவி எடுத்துக்கொண்டு முதற்கை கொடுத்து,

(வி - ரை.) இவ்விதம் அன்வயப்படுத்தாது இரண்டு அடிகளையும் அவ்விதமே வைத்துக்கொண்டு, மத்தளம் போன்ற தனது அகன்ற கையிலே பொருந்தும்படி ஏந்திக்கொண்டு அவர்களுள் மெல்லிய தோளையுடைய பெண்மான் போன்ற பல பெண்களைத் தழுவி முதற்கை கொடுத்து என்பாரும் உளர்.

இதுவுமன்றி,

'முழவு உறழ் தடம் கையின் இகல்வேல் ஏந்தி மெல் தோள் பல்பிணை தழீஇ' என்று பாடமோதி மத்தளத்தை யொத்த பெரிய கையில் மாறுபாட்டைச் செய்கின்ற வேலை ஏந்திக்கொண்டு மெத்தென்ற தோளினையுடைய குறமகளிரை அணைத்துக்கொண்டு என்று பொருள்கூறுவாருமுளர். தலைத்தந்து குன்றுதோறு என்று மேல்வருவதோடு கூட்டி 'அவ்விடத்து வந்து மலையிடங்கள் தோறும்' என்றும் உரைப்பர்.

முதற்கை கொடுத்தல், தலைக்கை தருதல் இரண்டும் ஒரு பொருளனவே. அது பல மங்கையரைத் தன்னுடைய கையி னாலே இறுகத் தழுவித் தான் விரும்புகின்ற மங்கையருள் அவர் களைத் தான் முதன்மையாக மதிப்பதனை அவர்களுக்கு வெளிப் படையாக அறிவித்தலாகும்.

217. (குன்றுதொ றாடலு நின்றதன்பண்பே:) குன்றுதொறு ஆடலும் தன் நின்ற பண்பு - ஒவ்வொரு மலையிலும் போய் விளை யாடுதலும் எப்போதும் தனக்கு நிலைபெற்ற குணமாம்.

(வி - ரை.) முருகக் கடவுளே வெறியாடுவோனாகியவேல னின் உடம்பில் நின்று ஆடல் செய்கின்றான் என்பது அன்பர் கொள்கையாதலின் வேலன் தொழிலை முருகன் தொழிலாகக் கூறினார் என்பதாம்.

ஆடையன் கண்ணியன் முதலியன குறிப்புவினை முற்றெச் சங்கள், ஈங்குச் செய்தெ னெச்சப் பொருளனவாய் வந்தன. அன்றி முற்றெச்ச வினையாகவே முழுதும்கொண்டு பொருள் உரைப்பாருமுளர்.

கானவர் குரவை யயரக் கண்டு மென்றோள் பல்பிணை குரவை யாடி யசைய அவ்வமயம் செய்யன் வேலன் வெண்கூ தாளம் தொடுத்த கண்ணி சூடிக், குழலூதிக் கோடு குறித்துப் பல்லிய முழங்கித் தகரைப் பின்னிட்டு மயிலை ஏறி உய்த்து

வளர்ந்து துணி யுடுத்து மங்கையர்த் தொகுதியுடனே மகளிருடனே மலைகள் தோறுஞ் சென்று தழீஇ எந்தித் தலைத்தந்து விளையாடலும் நின்ற தனது பண்பு என வினை முடிக்க.

அதாஅன்று - அதுவன்றி,

முருகன் மலைநாட்டுக் கடவுள் ஆம்.

இதனை,

.....................................................கல்லாங் குறிஞ்சி
..............................................................தெய்வம்
கோடாகரன் வருணன் குகன் இந்திரன் கூறுதுர்க்கை
மாடாயர் மீன்புல்லர் குயவர் நாடர் மறவருமே

என்பதனுல் அறிக.

## 6.—பழமுதிர்சோலை

சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியொடு * வயின்பட நிறீஇ
ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்
ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்
வேலன் தைஇய வெறியயர் களனுங்
காடுங் காவுங் கவின்பெறு துருத்தியும்
யாறுங் குளனும் வேறுபல் வைப்புஞ்
சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் † பொதியிலுங் கந்துடை நிலையினும்
‡ மாண்டலைக் கொடியொடு மண்ணி அமைவர
நெய்யோ டையவி அப்பிஐ துரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
முரண்கொள் உருவின் இரண்டுடன் உடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாள் கொழுவிடைக்
குருதியொடு ¶ விரைஇத் தூவெள் ளரிசி
சில்பலிச் செய்து பல்பிரப் பிரீஇச்
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையுற அறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பின் நன்னகர் வாழ்த்தி
நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி
இமிழிசை அருவியோ டின்னியங் கறங்க

---

* 'வயிற்புட' (பா - ம்.)
† 'பொதியினும்' (பா - ம்.)
‡ 'ஆண்டலை' (பா - ம்.)
¶ 'விரைஇய' (பா - ம்.)

உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்
முருகிய நிறுத்து முரணினர் உட்க
முருகாற்றுப் படுத்த உருகெழு வியன்நகர்
ஆடுகளஞ் சிலம்பப் பாடிப் பலவுடன்
கோடுவாய் வைத்துக் கொடுமணி இயக்கி
ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
ஆண்டாண் டுறைதலும் அறிந்த வாறே
ஆண்டாண் டாயினும் * ஆக காண்தக
† முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்திக்
கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி
நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
அறுவர் பயந்த ஆறமர் செல்வ
ஆல்கெழு கடவுள் புதல்வ மால்வரை
மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழையணி சிறப்பிற் பழையோள் குழவி
வானோர் வணங்குவில் தானைத் தலைவ
மாலை மார்ப நூலறி புலவ
செருவில் ஒருவ பொருவிறல் மள்ள
அந்தணர் வெறுக்கை அறிந்தோர் சொன்மலை
மங்கையர் கணவ மைந்தர் ஏறே
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ
குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து

---

* 'ஆகக் காண்தக' (பா - ம்.)
† 'முந்திநீ கண்டுழி முகமலர்ந் தேத்த' (பா - ம்.)

விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே
அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் முருக
* நசையுநர்க் கார்த்தும் இசைபே ராள
அலந்தோர்க் களிக்கும் பொலம்பூண் சேஎய்
மண்டமர் கடந்தநின் வென்றா டகலத்துப்
பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேஎள்
பெரியோ ரேத்தும் பெரும்பெயர் இயவுள்
சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி
போர்மிகு பொருந † குரிசி லெனப்பல
யானறி அளவையின் ஏத்தி ஆனாது
நின்னளந் தறிதல் மன்னுயிர்க் கருமையின்
நின்னடி உள்ளி ‡ வந்தனன் நின்னொடு
புரையுநர் இல்லாப் புலமை யோயெனக்
குறித்தது மொழியா அளவையிற் குறித்துடன்
வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர்
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி
அளியன் றானே முதுவாய் இரவலன்
வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென
இனியவும் நல்லவும் நனிபல ஏத்தித்
தெய்வஞ் சான்ற திறல்விளங் குருவின்
வான்தோய் நிவப்பிற் றான்வந் தெய்தி
அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி
அஞ்சல் ஓம்புமதி அறிவல்நின் வரவென
அன்புடை நன்மொழி அளைஇ விளிவின்

---

* 'நசையினர்' (பா - ம்.)
† 'குரிஞ்சில் லெனப்பல' (பா - ம்.)
‡ 'வந்தென' (பா - ம்.)

திருள்நிற மூந்நீர் வளைஇய உலகத்
தொருநீ யாகத் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசில் நல்குமதி பலவுடன்
வேறுபல் துகிலின் நுடங்கி அகில்சுமந்
தார முழுமுதல் உருட்டி வேரற்
பூவுடை அலங்குசினை புலம்பவேர் கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியிற் றொடுத்த
தண்கமழ் அலர்இறால் சிதைய நன்பல
ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமலர் உதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று
முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறங் கிளரப்பொன் கொழியா
வாழை முழுமுதல் துமியத் தாழை
இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கிக்
கறுக்கொடி கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை இரியக் கேழலோ
டிரும்பனை வெளிற்றின் புன்சா யன்ன
குரூஉமயி ரியாக்கைக் குடாவடி உளியம்
பெருங்கல் விடரளைச் செறியக் கருங்கோட்
டாமா நல்லேறு சிலைப்பச் சேண்நின்
றிழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

## 6.—பழமுதிர்சோலை

### (பொழிப்புரை)

சீரிய தினையரிசியை மலர்களுடன் பிரப்பரிசியாக வைத்து, ஆட்டுக்குட்டியை யறுத்துக், கோழிக் கொடியுடன் தன்னை ஒவ்வோர் இடத்திலும் நிற்கும்படி நிறுத்தி, ஊர்தொறும் ஊர் தொறும் அவரவர் காரிய முடிப்பதற்குத் தன்னை நோக்கி எடுத்துக்கொண்ட சிறப்புடைய திருவிழா நடக்கு மிடத்தினும், அன்புடையார் துதித்தலாலே தனது திருவுள்ளம் பொருந்துதல் வருகின்ற இடத்தினும், காட்டினும், சோலையினும், அழகுடைய ஆற்றிடைக்குறைகளினும், ஆறுகளினும், குளங்களினும், முன் சொன்னவை யன்றி வேறு பல வூர்களினும், முச்சந்திகளினும், நாற்சந்திகளினும், ஐஞ்சந்திகளினும் புதிய மலர் பூத்த கடப்ப மரத்திடத்தினும், ஊரார் அனைவரும் வந்தமரும் மரத்தடிகளினும், அம்பலங்களினும், ஆதீண்டு குற்றியையுடைய இடங்களினும், மாட்சிமை பொருந்திய சிறப்புப்பெற்ற கோழிக் கொடியுடன் அழகு பொருந்திய அகன்ற ஆலயத்தைப் பொருந்த அலங்கரித்து, நெய்யொடு வெண்சிறு கடுகையும் அப்பிக், குனிந்து கை குவித்து வணங்கி, அழகிய மலரைத் தூவித், தம்முள் மாறு கொண்ட வடிவத்தினை யுடைய சீலைகளை ஒன்றாக உடுத்துச், சிவந்த நூலைக் கொண்டு கையில் காப்புக் கட்டி, வெள்ளிய பொரியைத் தூவி, மிகுந்த வலி நிலைபெற்ற பெரிய கால்களுடைய கொழுத்த ஆட்டுக்கிடாவினது இரத்தத்துடன் பிசைந்த தூய வெள்ளரிசியைச் சிறு பலியாக இட்டுப், பல பிரப்பும் வைத்துச், சிறிய பசுத்த மஞ்சளுடன் வாசனைச் சந்தனம் முதலியவை தெளித்துப், பெரிய குளிர்ந்த செவ்வலரி மாலையையும், அதனைத் தவிர்த்த நறுமணமுள்ள குளிர்ந்த மாலைகளையும், நுனியொக்க அறுத்துத், தம்முள் ஒப்புமை இல்லாதவாறு அசையத் தொங்கும்படி கட்டிச், செறிந்த மலைப்பக்கத்திலுள்ள நல்ல ஊர்களைப் "பசியும் பிணியும் பகையும் நீங்கி வசியும் வளனும் சுரக்கென

வாழ்த்தி," நறுமணத் தூபங் கொடுத்துக் குறிஞ்சி ராகம் பாடி, ஓசை முழங்குகின்ற அருவியுடன் இனிய வாத்தியங்கள் ஒலிக்கச், சிவந்த நிறம் பொருந்திய பல மலர்களைத் தூவி, அச்சந் தரும்படி இரத்தம் தோய்ந்த சிவந்த தினையினைப் பரப்பித் தேவராட்டி யாகிய குறத்தி முருகன் மகிழும் வாத்தியத்தை வாசிக்கச் செய்து, பகைவர் அஞ்சுமாறு முருகக்கடவுளை வரும்படி வழிப்படுத்தின அச்சம் பொருந்திய அகன்ற நகரினிடத்து, வெறியாட்டுக்களம் ஆரவாரிக்க அதற்கிசைந்தனவற்றைப் பாடி, ஊதுகொம்புகள் பல வற்றையும் ஒருசேர ஊதிக் கொடிய மணிகளையும் ஒலிக்கச் செய்து, கெடாத வளமை பொருந்திய பிணிமுகம் என்னும் பட்டத்தையுடைய யானையை வாழ்த்தி, விரும்புவார் விரும்பியவிதம் பெற்று நின்று வணங்க, முற்கூறிய இடங்களில் உறைதலும் உரியன்;

அதனை யான் அறிந்தபடியே சொன்னேன்; யான் முன்னே கூறிய அந்தந்த இடங்களிலாயினும் சரியே, பிறவிடங்களிலாயினும் சரியே அவன் எழுந்தருளி இருத்தற்குரிய இடங்களை முன்னே நீ கண்டபோது அழகுக்குத் தகுதியான முகம் விரும்பித் துதித்து, முதலில் கரங்களைத் தலைமேற் குவித்துத் தொழுது வாழ்த்திப் பிறகு, சீபாதம் சிரசில் பொருந்தும்படி தண்டனிட்டு, "நீண்ட பெரிய இமயமலை உச்சியில் நாணல் வளர்ந்த பசிய சுனையின் கண்ணே (சரவணப்பொய்கை) பஞ்சபூதங்களுள் ஒன்றாகிய அக்கினிக்கடவுள் தனது உள்ளங்கையில் கொள்ள, அருந்ததி ஒழிந்த கார்த்திகை முதலிய ஆறு மங்கையரால் பெறப்பட்ட ஆறு உருவங்கள் பொருந்திய செல்வனே!, கல்லாலமரத்தின்கீழ் எழுந்தருளி யிருந்த சிவபெருமானின் புதல்வனே!, பெரிய மலையாகிய மலையரையனின் மகளான பார்வதிதேவியின் குமாரனே!, பகைவர்க்கு இயமனே!, வெல்லும்போரைச் செய்பவளும் உலகுக்கு வெற்றியைத் தருபவளும் ஆகிய வனதுர்க்கையின் புத்திரனே !, ஆபரணம் அணிந்த சிறப்பினை யுடைய காடுகாளின் குழந்தையே !, தேவர்களின் படைத்தலைவனே!, வளையும் வில்லையுடைய தலைவ

னே!, இன்பத்திற்குரிய கடப்பமாலையை அணிந்த திருமார்பனே!, ஞான நூல்கள் அனைத்தையும் அறிந்த புலவனே!, போரில் ஒப்பற்றவனே!, போர் செய்கின்ற வெற்றி பொருந்திய திண்ணியனே!, அந்தணர் பெருஞ் செல்வமே!, சான்றோர் புகழ்மலையே!, தெய்வயானையார் வள்ளிநாச்சியார் என்னும் இருமகளிர்க்கும் கணவனே!, வீரர்க்கு ஆண்சிங்கமே!, வேல் பொருந்திய அகன்ற கையுடைய பெருஞ் செல்வனே!, கிரௌஞ்சகிரியைப் பிளந்த குறையாத வெற்றியினை யுடைய தலைவனே!, தேவர் உலகத்தைத் தீண்டும் நீண்ட மலைகளை யுடைய குறிஞ்சி நிலத்திற்கு உரிமை உடையவனே!, பலரும் பாராட்டும் நல்ல மொழிகளை யுடைய பிறமதத்தில் இருப்பவர்க்கு ஆண்சிங்கத்தின் தன்மையுடையவனே!, ஏனையோர்க்கும் பெறுதற்கு அரிய முறையினை யுடைய வீடென்னும் பெரும் பொருளை யுடைய முருகனே!, வீட்டை விரும்பி வந்தவர்க்கு அதனை அனுபவிக்கச் செய்யும் பெரும்புகழினை யாள்பவனே!, பிறரால் துன்புறுத்தப்பட்டு வந்தவர்க்கு அருள் செய்பவனும் மிக்குச் செல்கின்ற போர்களை முடித்துப் பகைவரை வென்று கொல்கின்ற நினது மார்பினிடத்தே பொன்னாபரணங்களை யணிந்தவனும் ஆகிய சேயே!, நின்வயம் வந்த இரவலர்க்கு விரும்பினதை அருளிக் காக்கின்ற கண்டார்க்கு அச்சம் பொருந்திய நீண்ட வடிவத்தினையுடைய வேளே! சான்றோர் போற்றும் பெரிய திருநாமம் உடைய தலைவனே! போர்வினையிலே மிகுந்த வலிமையாலே சூரபதுமனின் குலமானது இல்லையாமாறு செய்த மதவலி எனும் திருநாமத்தையுடையவனே!, வீரருக்கு உவமிக்கப் படுபவனாயிருப்பவனே!," என்று யான் அறிந்து சொன்ன அளவிலே நீயும் அமைந்து விடாது இன்னும் பலவற்றையும் சொல்லிப் புகழ்ந்து, "நினது பெருமை எல்லாவற்றையும் முழுதும் அளவிட்டுணர்தல் பல வுயிர்க்கும் அருமையானதால் நினது திருவடியைப் பெற வேண்டி நினைந்து வந்தேன், நினக்கு நிகர்வார் இல்லாத மெய்யறிவு உடையவனே!," என்று சொல்லி நீ நினைந்த வீடுபேற்றினை விண்ணப்பித்துக் கொள்வதற்கு முன்னே வேறு பல உருவங்களை யுடைய சிறிய பல தொழுவாரைச் சேரக் கருதித் திருவிழா

எடுத்த காலத்தில் நீ பொலிவு பெறத் தோன்றி "யறிவு முதிர்ந்த மொழிகளை யுடைய இந்த இரவலன் (புலவன்) தான் நினது அருளுக்குரியான், சான்றோய்! நினது பெரும் புகழினை விரும்பிக் கேட்பவர்க்கு இனியனவும் நல்லனவும் ஆகிய மிகுந்த பலவற்றைத் துதித்து வந்தோன்" என்று சொல்லக் கடவுட்டன்மை மிகுந்த வலிமை பொலிகின்ற உருவத்தினையும் ஆகாயத்தைத் தீண்டும் உயர்ச்சியையும் உடைய அவன் வந்தணுகி வருத்துந் தன்மை வாய்ந்த கடவுட்டன்மையை உள்ளடக்கிக்கொண்டு வாசனை கமழ்கின்ற கடவுட்டன்மையை யுடைய முன்பு உதித்த தனது இளைய வடிவத்தை உனக்குக் காட்டி "நீ வீடு பெறுவதற்குக் கருதி வந்த வரவினை யான் முன்னரே அறிவேன்; அது நினக்கு அடைதல் அரியதென்று அஞ்சுதலை விட்டுவிடு," என்று நின்மீது அன்புடையனவாகிய பல நல்ல மொழிகளைப் பலமுறை உனக்கருளிச் செய்து ;

அவன் பல வேறு வெள்ளிய சீலைக்கொடிகள் போலக் கூட அசைந்து அகிற்கட்டைகளைச சுமந்துகொண்டு சந்தனமாகிய பெரிய மரத்தைத் தள்ளியும், சிறிய மூங்கிலினது பூவையுடைய அசைகின்ற கொம்புகள் வேறுமாறு வேரைப் பிளந்தும், தேவருலகத்தைத் தீண்டுகின்ற மலையிடத்தில் சூர்யமண்டலம்போல் கட்டப்பெற்ற மணங்கமழும் விரிந்த தேன்கூடு கெடவும், நல்ல பல ஈரப்பலாவின் நல்ல முதிர்ந்த சுளை தன்னிடத்தே கலக்கவும், மலையுச்சியில் உண்டாகிய சுரபுன்னையின் நறுநாற்றமுடைய மலர்கள் உதிரவும், கருங்குரங்குடன் கருத்த முகமுடைய அதன் ஆணும் நடுங்கவும், செம்புள்ளிகள் பொருந்திய மத்தகத்தையுடைய பெரிய பெண் யானைகள் குளிரால் நடுங்கும்படி வீசியும், பெரிய யானையின் முத்துப் பொருந்திய வெள்ளிய தந்தங்களை உள்ளடக்கிக் கொண்டும், நல்ல பொன்னும் மணியும் நிறம் பொலியுமாறு மேலே கொண்டு குதித்தும், வாழையின் பெரிய மரம் துணியும்படி தெங்கின் இளநீர் பொருந்திய சிறந்த குலை உதிரும்படிக்கு அவ் விரண்டினையும் மோதியும், மிளகுக்கொடியின் கரிய

கொத்துக்கள் சாயவும், பீலிகையுடைய இடத்தையும் மடப்பத்தை யுடைய நடையினையு முடைய மயில்களுடன் கோழியினுடைய வலி பொருந்திய பெட்டை பலவுஞ் சேரக் கூடவும், ஆண்பன்றி யுடன் வயிரமில்லாத கரிய பனையின் சிறிய சிலாம்பை ஒத்த கரிய நிறம் பொருந்திய மயிருடைய உடம்பினையும் வளைந்த அடியினை யும் உடைய காடிகள் பெரிய கல் பிளந்த குகைகளிலே சேரவும், கரிய கொம்புடைய 'ஆமா' வென்ற காட்டு மாடாகிய நல்ல ரிஷ பங்கள் முழங்கவும், மலையுச்சியி னின்றும் இழும் என்னும் ஓசை படக் குதிக்கும் அருவியை யுடைய பழமுதிர்ந்த சோலைகளை யுடைய மலைக்கு உரிமையை யுடையவனாகிய முருகன் ;

இருண்ட நிறமுடைய கடல் சூழ்ந்த உலகில் நீ ஒருவன் தான் பிறர்க்கு வீடளித்தற்கு உரிமை உடையவனாய்க் கேடின்றித் தோன்றுமாறு, மேன்மையுடைய பிறரால் பெறுதற்கரிய வீடு பேற்றினை அருள்வான்.

## இதன் பொருள்

## 6.—பழமுதிர்சோலை

218. சிறு தினை மலரொடு விரைஇ மறி அறுத்து - சிறிய தினையரிசியை மலர்களுடன் கலந்து பிரப்பரிசியாக வைத்து ஆட்டுக்குட்டியை யறுத்து,

(வி - ரை.) பிரப்பு - ஒரு காலத்தில் பல்லுணவின் வரப்பு.

219. வாரணம் கொடியொடு வயின்பட நிறீஇ - கோழிக் கொடியுடன் தன்னை ஒவ்வோர் இடத்திலும் நிற்கும்படி நிறுத்தி,

(வி - ரை.) வயிற்புடன் என்று பாடம் ஓதிக் கெம்புடன் குறிக்க என்பாரும் உளர்.

220. ஊர் ஊர் கொண்ட சீர் கெழு விழவினும் - ஊர் தோறும் ஊர்தோறும் தான் நினைத்த காரியம் முடிப்பதற்கு

முருகப்பிரானை நோக்கி எடுத்துக்கொண்ட சிறப்புப் பொருந்தின திருவிழா நடக்கு மிடத்தினும்,

(வி-ரை.) ஊர் ஊர் என்பதனைப் பன்மை யடுக்காகக் கொண்டு ஊர்தோறும் என்பாரு முளர்.

சீர் கெழு, தலைமை பொருந்திய, அழகு பொருந்திய எனினும் பொருந்தும்.

221. ஆர்வலர் ஏத்த மே வரு நிலையினும் - தன்மேல் அன்புடையார் துதித்தலாலே தனது திருவுள்ளம் பொருந்துதல் வருகின்ற இடத்தினும்,

(வி-ரை.) ஆர்வலர், ஒன்றுற் குறைவுடையார் என்பாரு முளர்.

மேவரு, மேவி நிற்கும் எனினும் தன் மனம் விரும்பிய எனினும் அமையும். நிலை - இடம்.

222. வேலன் தைஇய வெறி அயர் களனும் - வெறியாடுவான் இழைத்த வெறியாட்டுக்களத்தினும்,

(வி-ரை.) முருகக் கடவுளின் வேற்படையைத் தனக்கு அடையாளமாகக் கொண்டு திரிபவன் வேலன்.

"வெறியறி சிறப்பின் வேலன்" என்று புறத்திற் கூறியது காண்க.

223. காடும் காவும் கவின் பெறு துருத்தியும் - காட்டினும், சோலையினும், அழகு பெறுகின்ற ஆற்றுத்திட்டுக்களினும்,

(வி-ரை.) துருத்தி - ஆற்றுத்திட்டு, ஆற்றிடைக்குறை- யாறும் குளனும் - ஆறுகளினும், குளங்களினும்,

224. வேறு பல் வைப்பும் - முன்னே சொன்ன ஊர்களே யன்றி வேறு பல ஊர்களினும்,

(வி - ரை.) வேறு பல இடங்களிலும் எனினும் பொருந்தும்.

225. சதுக்கமும் - நாற்சந்திகளினும்,

சந்தியும் - முச்சந்திகளிலும், ஐஞ்சந்திகளினும்,

புது பூ கடம்பும் - புதிய மலர் பூத்த கடப்பமரங்களின் இடத்திலும்,

226. மன்றமும் - ஊர் நடுவே எல்லோரும் வந்து கூடும் மரத்தடிகளிலும்,

பொதியிலும் - அம்பலங்களினும்,

(வி - ரை.) அம்பலம் - பலர்க்கும் பொதுவான இடம்.

பொதியிலும் என்பதற்குப் பொதியமலை என்பாருமுளர்.

கந்து உடை நிலையினும் - ஆதீண்டுகுற்றியை யுடைய இடங்களிலும்,

(வி - ரை.) ஆதீண்டுகுற்றி - பசுக்கள் உராய்ந்து தினவு தீர்த்துக்கொள்ளும் கம்பங்கள்,

இதற்கு யானைத்தறியி னிடத்திலும் என்பாருமுளர்.

227. (மாண்டலைக் கொடியொடு மண்ணி அமைவர:) மாண்தலை கொடியொடு, உரு கெழு வியனகர் (244-ம் வரி), அமைவர மண்ணி - மாட்சிமை பொருந்திய சிறப்புப் பெற்ற கோழிக்கொடியுடன் அழகு பொருந்திய அகன்ற ஆலயத்தைப் பொருந்த அலங்கரித்து,

(வி - ரை.) கொடியொடு மண்ணி அமை வர கோழிக் கொடியுடன் யாறுடி அமைவும் வரவும் பட்டு என்பாருமுளர்.

எனின் கோழிக்கொடியுடன் ஆற்றில் ஸ்நானம் செய்து வருதலும் பட்டு என்க.

ஆண்தலை என்பது பாடம் ஆயின் பேய் முதலியன பலியை அருந்தாமல் தலையை யாண்மகன் தலையாகவும் உடம்பைப் பறவையின் வடிவாகவும் எழுதப்பெற்ற கொடி என்க.

இனி, ஆண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர, மயிற்கொடியொடு விளங்கக் கண்டார்க்கு நிறைவர என்பாருமுளர்.

228. நெய்யோடு ஐயவி அப்பி - நெய்யுடன் வெண் சிறு கடுகையும் அப்பி,

(வி - ரை.) அப்பி, நெற்றியிலே யப்பி என்பாரு முளர்.

ஐது உரைத்து - தனது வழிபாட்டிற்குரிய மந்திரத்தை (ஒலிவெளித் தோன்றாது) மெல்ல உச்சரித்து,

229. குடந்தம் பட்டு - தொழுது,

(வி - ரை.) அதாவது குனிந்து கைகுவித்து வணங்கி என்றாவது, கைகூப்பி நெஞ்சிலே வைத்தென்றாவது கொள்க.

குட வென்பது குடந்தம் என நின்றது என்றும், தடவென்பதுபோல வளைவை உணர்த்து மோருரிச் சொல்லடியாகப் பிறந்த பெயரும் என்றும்,

அது,

"நால்விரல் முடக்கிப் பெருவிர னிறுத்தி
நெஞ்சிடை வைப்பது குடந்த மாகும்"

என்றும் கொள்வாரும் உளர்.

கொழு மலர் சிதறி - அழகிய மலரைத் தூவி,

(வி - ரை.) கொழு, வளமை பொருந்திய எனினுமாம்.

230. முரண் கொள் உருவின் இரண்டு உடன் உடீஇ - தம்முள் மாறுகொண்ட வடிவத்தினையுடைய இரு அறுவைகளான சீலைகளை ஒன்றாக உடுத்து,

(வி - ரை.) வேறு பல இடங்களிலும் எனினும் பொருந்தும்.

225. சதுக்கமும் - நாற்சந்திகளினும்,

சந்தியும் - முச்சந்திகளிலும், ஐஞ்சந்திகளினும்,

புது பூ கடம்பும் - புதிய மலர் பூத்த கடப்பமரங்களின் இடத்திலும்,

226. மன்றமும் - ஊர் நடுவே எல்லோரும் வந்து கூடும் மரத்தடிகளிலும்,

பொதியிலும் - அம்பலங்களினும்,

(வி - ரை.) அம்பலம் - பலர்க்கும் பொதுவான இடம்.

பொதியிலும் என்பதற்குப் பொதியமலை என்பாருமுளர்.

கந்து உடை நிலையினும் - ஆதீண்டுகுற்றியை யுடைய இடங்களிலும்,

(வி - ரை.) ஆதீண்டுகுற்றி - பசுக்கள் உராய்ந்து தினவு தீர்த்துக்கொள்ளும் கம்பங்கள்,

இதற்கு யானைத்தறியி னிடத்திலும் என்பாருமுளர்.

227. (மாண்டலைக் கொடியொடு மண்ணி அமைவர:) மாண் தலை கொடியொடு, உரு கெழு வியனகர் (244-ம் வரி), அமைவர மண்ணி - மாட்சிமை பொருந்திய சிறப்புப் பெற்ற கோழிக்கொடியுடன் அழகு பொருந்திய அகன்ற ஆலயத்தைப் பொருந்த அலங்கரித்து,

(வி - ரை.) கொடியொடு மண்ணி அமை வர கோழிக் கொடியுடன் யாறுடி அமைவும் வரவும் பட்டு என்பாருமுளர்.

எனின் கோழிக்கொடியுடன் ஆற்றில் ஸ்நானம் செய்து வருதலும் பட்டு என்க.

ஆண்தலை என்பது பாடம் ஆயின் பேய் முதலியன பலியை அருந்தாமல் தலையை யாண்மகன் தலையாகவும் உடம்பைப் பறவையின் வடிவாகவும் எழுதப்பெற்ற கொடி என்க.

இனி, ஆண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர, மயிற்கொடியொடு விளங்கக் கண்டார்க்கு நிறைவர என்பாருமுளர்.

228. நெய்யோடு ஐயவி அப்பி - நெய்யுடன் வெண் சிறு கடுகையும் அப்பி,

(வி - ரை.) அப்பி, நெற்றியிலே யப்பி என்பாரு முளர்.

ஐது உரைத்து - தனது வழிபாட்டிற்குரிய மந்திரத்தை (ஒலிவெளித் தோன்ருது) மெல்ல உச்சரித்து,

229. குடந்தம் பட்டு - தொழுது,

(வி - ரை.) அதாவது குனிந்து கைகுவித்து வணங்கி என்ருவது, கைகூப்பி நெஞ்சிலே வைத்தென்ருவது கொள்க.

குட வென்பது குடந்தம் என நீன்றது என்றும், தடவென்பதுபோல வளைவை உணர்த்து மோருரிச் சொல்லடியாகப் பிறந்த பெயரும் என்றும்,

அது,

“ நால்விரன் முடக்கிப் பெருவிர னிறுத்தி
நெஞ்சிடை வைப்பது குடந்த மாகும் ”

என்றும் கொள்வாரும் உளர்.

கொழு மலர் சிதறி - அழகிய மலரைத் தூவி,

(வி - ரை.) கொழு, வளமை பொருந்திய எனினுமாம்.

230. முரண் கொள் உருவின் இரண்டு உடன் உடீஇ - தம்முள் மாறுகொண்ட வடிவத்தினையுடைய இரு அறுவைகளான சீலைகளை ஒன்ருக உடுத்து,

(வி - ரை.) உடன் உடீஇ - உள் ஒன்றும் புறம் ஒன்றுமாக உடுத்துதல்,

இரண்டு, இரண்டு வெண்பட்டையும் என்பாரும் உளர்.

231. செந்நூல் யாத்து - சிவந்த நூலைக் கொண்டு கையில் காப்புக் கட்டி,

(வி - ரை.) நோன்பு அனுஷ்டிக்கும்வரைத் தகாதன செய்ய மனந் தூண்டுமாகில் அதினின்றும் காத்துக் கொள்வதற்குக் கையில் கட்டப்படுவதே காப்பாகும். காப்பு - நோன்பினை ஞாபகப் படுத்துவதாகும். நூலொழுக்கி யெல்லைப் படுத்தென்றும் உரைப்பர்.

வெள் பொரி சிதறி - வெள்ளிய பொரியைத் தூவி,

239. மத வலி நிலைஇய மா தாள் கொழு விடை - மிகுந்த வலி நிலைபெற்ற பெரிய கால்களையுடைய கொழுத்த ஆட்டுக்கிடாவினது,

(வி - ரை.) மதத்தையும் வலியையும் நிலை பெற்றுப் பெரிய காலினை யுடைத்தாய யானைத்திரளை அறுத்து என்றும் உரைப்பர்.

233. குருதியொடு விரைஇய தூ வெள் அரிசி - இரத்தத்துடன் பிசைந்த தூய வெள்ளையரிசியை,

234. சில் பலி செய்து - சிறு பலியாக இட்டு,

(வி - ரை.) பல பலிகளையும் கொடுத்து என்பாரும் உளர்.

பல் பிரப்பு இரீஇ - பல பிரப்பும் வைத்து,

(வி - ரை.) கொள்கல மொன்றில் குறுணி யாகப்,
பல்லுணவு பெய்து பாரிப்பது பிரப்பே.

குறுணி அளவு கொண்ட பண்டங்களையுடைய பல கலங்களைப் பரப்புதல். கலம் - பாத்திரம்.

பல பிரப்பாக முலைப்பட்டம் எழுதி என்பாரும் உளர். பிரப்புக்கூடை என்றுங் கூறுவர்.

235. சிறு பசு மஞ்சளொடு நறு விரை தெளித்து - சிறிய பசுத்த மஞ்சளுடன் வாசனைச் சந்தனம் முதலியவை தெளித்து,

(வி - ரை.) சிறு பசுமஞ்சள் என்பதை மஞ்சளின் ஓர் சாதி விசேடம் எனவும் கொள்ளலாம். விரை - வாசனை அதனையுடைய சந்தனத்திற் கானதால் ஆகுபெயர்.

மிக்க மணமுள்ள பொருள்களைத் தெளித்து என்றுங் கூறலாம்.

மஞ்சளொடு, காட்டுமஞ்சளொடு என்பாரு முளர்.

நறுவிரை, நல்ல மும்மலர்களையும் என்றும் உரைப்பர்.

236-37. (பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை, துணையற அறுத்துத் தூங்க நாற்றி:) பெரு தண் கணவீரம் மாலை - பெரிய குளிர்ந்த செவ்வலரி மாலையையும்,

நறு தண் மாலை - அதனைத் தவிர்த்த நறுமணமுள்ள குளிர்ந்த மாலைகளையும்,

அறுத்து - நுனி யொக்க அறுத்து,

துணை அற தூங்க நாற்றி - தம்முள் ஒப்புமை யில்லாதவாறு அசையத் தொங்கும்படி கட்டி,

(வி - ரை.) தம்மில் சமப்பாதியாக அறுத்து எனினுமாம்.

இவ்விதம் அன்வயப்படுத்தாது இரு அடிகளுக்கும் பெரிய குளிர்ந்த செவ்வலரிப் பூவின் நறுவிய தட்பம் பொருந்திய மாலையை இணையொக்க நறுக்கி அசைதரப் பூங்கோயிலாகத் தூக்கி என்பாரு முளர்.

238. நளி மலை சிலம்பில் நல் நகர் வாழ்த்தி - செறிந்த மலைப்பக்கத்தில் உள்ள நல்ல ஊர்களை வாழ்த்தி,

(வி - ரை.) "பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி"
(சிலப்பதிகாரம்)

என்பதனான் அறிக.

நளி மலை, குளிர்ந்த மலையிடத்து, அகன்ற மலையிடத்து, கூட்டமான மலையிடத்து, பெரிய மலையிடத்து என்றும் உரைக்கலாம். நகர், முருகன் கோயில் என்றும் உரைக்கலாம்.

235. நறு புகை எடுத்து - நறுமணத் தூபங்கொடுத்து,

குறிஞ்சி பாடி - அந்நிலத்திற் குரிய குறிஞ்சி ராகத்தைப்பாடி,

240. இமிழ் இசை அருவியொடு இன்னியம் கறங்க - முழங்குகின்ற ஓசையுடைய அருவியுடன் இனிய வாச்சியங்கள் ஒலிக்க,

(வி - ரை.) மலையினின்றும் விழுகின்ற மெத்தென்ற அருவியோசையுடனே இனிதாக வாசசியங்கள் முழங்க எனினுமாம்.

இமிழ் இசை, மிகவும் ஒலிக்கின்ற என்றும் உரைப்பர்.

241-42. உருவம் பல்பூ தூஉய் வெருவர குருதி செந்தினை பரப்பி - சிவந்த நிறம் பொருந்திய பல மலர்களைத் தூவி அச்சந் தரும்படி இரத்தந் தோய்ந்த சிவந்த தினையினைப் பரப்பி,

(வி - ரை.) உருவப்பல்பூ, பல நிறங்களையுடைய பூக்களை என்றும்; குருதி செந்தினை, உதிரம்போன்ற செந்தினைகளை என்றும் உரைப்பர்.

242-44. குறமகள் முருகு இயம் நிறுத்து முரணினர் உட்க முருகு ஆற்றுப்படுத்த உரு கெழு வியன் நகர - தேவராட்டியாகிய குறத்தி முருகன் மகிழும் வாச்சியத்தை வாசிக்கச் செய்து பகைவர் அஞ்சுமாறு முருகக்கடவுளை வரும்படி வழிப்படுத்தின அச்சம் பொருந்தின அகன்ற நகரினிடத்து,

(வி - ரை.) முருகியம் நிறுத்து, முருகனுக்கு உடைமையாகிய முருகிய மென்ற துடியையுங் கொட்டி என்றும் தொண்டகப்

பறை யென்றும் கூறுவாருமுளர். தொண்டகப்பறை, குறிஞ்சி நிலப்பறை. இதனை வெறியாட்டுப்பறை என்றுங் கொள்ளலாம். முரணினர், தங்களுக்குள் மாறுபட்டோர் என்று சிலரும், தெய்வ மில்லை யென்பார் என்று சிலரும் கூறுவர். உருகெழு வியன்நகர், அழகமைந்துள்ள பெரிய ஊர்களில் எனினும் பொருந்தும். நகர், பிள்ளையார் ஆலயம் எனினுமாம்.

குறமகள் கொடியொடு அமைவர மண்ணி ஐயவி அப்பி மந்திரம் ஓது உரைத்துக் குடந்தம்பட்டுக் கொழுமலர் சிதறி இரண்டுடன் உடீஇச் செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி அரிசி சில்பலிசெய்து பல்பிரப்பிரீஇ நறுவிரை தெளித்து மாலை தூங்க நாற்றி நன்னகர் வாழ்த்திப் புகை எடுத்துக் குறிஞ்சி பாடி இன்னியங் கறங்கப் பூ தூஉய்ச் செந்தினை பரப்பி ஆற்றுப்படுத்த நகரென வினை முடிக்க.

முருகசாந்திபண்ண ஆற்றுப்படுத்தாள்.

245. ஆடுகளம் சிலம்ப பாடி - வெறியாட்டுக்களம் ஆரவாரிக்கும்படி அதற்கிசைந்தன வற்றைப் பாடி,

(வி - ரை.) வெறியாட்டாளர்கள் ஆரவாரிக்கப் பாடி எனினுமாம்.

245-46. (பலவுடன் கோடுவாய் வைத்து :) கோடு பல உடன் வாய்வைத்து - ஊதுகொம்புகள் பலவற்றையும் ஒரு சேர ஊதி,

(வி - ரை.) பல முழக்கத்துடனே கொம்பு குறித்து எனினுமாம். பல முழக்கத்துடனே சங்கு குறித்த தென்றும் உரைப்பர்.

கொடு மணி இயக்கி - கொடிய மணிகளையும் ஒலிக்கச்செய்து,

(வி - ரை.) ஓசைமிக்க மணிகளையும் எறிந்தும் என்றும், கொடிய ஓசை உண்டாக்கும் மணிகளை ஆட்டி என்றும், கொடிய மணிகளை முழக்கி என்றும் கூறினும் அமையும்.

247. ஓடா பூட்கை பிணிமுகம் வாழ்த்தி - கெடாத வலிமை பொருந்திய பிணிமுகம் என்னும் பட்டத்தையுடைய யானையை வாழ்த்தி,

(வி - ரை.) ஓடா பூட்கை, பகைவர்க்குப் புறமுதுகு காட்டி ஓடாத யானையையும்; பிணிமுகம், மயிலையும் என்றும் உரைப்பர். பிணிமுகமென்னும் பெயருடைய யானையை எனக் கூறிப் பிணிமுகம் என்பது பிள்ளையார் பவனி வரும் யானையின் பெயர் என்று கூறுவாரு முளர்.

இதற்குச் "சேயுயர் பிணிமுக மூர்ந்த" என்று பரிபாடலிலிருந்தும் "பிணிமுக மஞ்ஞை செருமுகத் தேந்திய" என்று கல்லாடத்திலிருந்தும் எடுத்துக் காட்டுகின்றனர்.

248. வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட - விரும்புவார் விரும்பிய விதம் பெற்று நின்று வணங்க,

(வி - ரை.) வேண்டினோர் வேண்டிய வரங்களைப் பெறவேண்டுமென்று வழிபட எனினும் அமையும்.

எய்தினர் வழிபட, அடைந்து வணங்க என்பாரும் உளர்.

நகரில் பாடி வைத்து இயக்கி வாழ்த்தி வழிபட உறைதலும் உரியன் என்க.

விழவின்கண்ணும் நிலையின்கண்ணும் கந்துடைய நிலையின்கண்ணும் உறைதலும் உரியன் என்க.

249. ஆண்டு ஆண்டு உறைதலும் - வெறியாட்டுக்களத்தினும், காட்டினும், சோலையினும், ஆற்றிடைக் குறையினும், ஆற்றினும், குளத்தினும், வைப்பினும், முச்சந்தி நாற்சந்தி ஐஞ்சந்திகளினும், புதுப்பூங்கடம்பினும், மன்றிலும், பொதியிலும் ஆகிய அந்த அந்த இடங்களில் உறைதலும் உரியன்,

அறிந்தவாறே - யான் அறிந்தபடியே சொன்னேன்,

250. ஆண்டு ஆண்டு ஆயினும் ஆக - யான் முன்னே கூறிய அந்தந்த இடங்களிலாயினுஞ் சரியே பிறவிடங்களிலாயினும் சரியே,

(வி - ரை.) உம், ஐயவும்மை.

250-51. (காண்டக, முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்தி:) முந்து நீ கண்டுழி காண்தக முகன் அமர்ந்து ஏத்தி-அவன் எழுந்தருளி யிருத்தற்குரிய இடங்களை முன்னே நீ கண்டபோது அழகுக்குத் தகுதியான முகம் விரும்பித் துதித்து,

(வி - ரை.) ஆக காண்தக என முன் சென்றதுடன் கூட்டி ஆகிக் கண்டவிடத்திலே என்றும் உரைப்பர். காண்தக, அவனைக் காணுதற்குத் தகுதியாக என்பாருமுளர்.

முகன் அமர்ந்து, முகமலர்ந்து எனினும் அமையும். அவனுடைய கடவுள் தன்மையைத் தரிசிக்கும்போது அஞ்சாதிருப்பதற்கே முகனமர்ந் தென்றார்.

252. கை தொழூஉ பரவி - முதலில் கரங்களைச் சிரசின்மேற் குவித்துத் தொழுது வாழ்த்தி,

கால் உற வணங்கி - பிறகு சீபாதம் சிரசில் பொருந்தும்படி தண்டனிட்டு,

(வி - ரை.) உற, விழைவுற்று எனினும் அழகுடைத்தாம்.

253. நெடு பெரு சிமையத்து நீலம் பைஞ்சுனை - நீண்ட பெரிய இமயமலையின் உச்சியில் நாணல் வளர்ந்த பசுமையான சுனையின் கண்ணே,

(வி - ரை.) நீல நிறம் பொருந்திய நாணலுக்கானதால் நீலம் ஆகுபெயர். அன்றியும் நீலநிறம் பொருந்திய சுனை எனினும் பொருந்தும். இது சரவணப்பொய்கை.

நீலோற்பல முதலாயுள்ள பூக்கள் மிடைந்து கிடக்கின்ற சரவணப்பொய்கை என்பாரு முளர்.

254. ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப-பஞ்ச பூதங்களுள் ஒன்றாகிய அக்கினிக்கடவுள் தனது உள்ளங்கையில் கொள்ள,

(வி - ரை.) அங்கை, அழகிய கை எனினுமாம்.

ஐம்பூதங்கள் - மண், நீர், தீ, காற்று, வானம்.

ஐவகைப் பூதங்களுக்கும் நாயகரானவர் பிரமா, விண்டு, உருத்திரன், ஈசுரன், சதாசிவன்; இவர்களில் உருத்திரன் அக்கினிக் கடவுளாவான்.

அக்கினிக் கடவுள் அங்கை ஏற்றது:—சிவபெருமானிடத்து இந்திரன் பெற்ற கருவினை முனிவர்கள் வாங்கித் தமக்குப் பொறுத்தற்குரியதன்றென்று பெருமான் கூறாகிய முத்தீக் குண்டத்து இட்டனர்.

255. அறுவர் பயந்த ஆறு அமர் செல்வ - அருந்ததி யொழிந்த ஆறு மங்கையரால் பெறப்பட்ட ஆறு உருவங்கள் பொருந்திய செல்வனே!,

(வி - ரை.) அவ்விதம் நெருப்பில் இட்டு வன்மை குறையப் பெற்ற கருவினை எழு முனிவர்களும் எடுத்துப் பாரியைகளிடம் கொடுக்கவும், அருந்ததி நீங்கிய கார்த்திகை முதலிய ஆறுமங்கையர் விழுங்கிக் கருப்பம் வளர்ந்து சரவணப்பொய்கையில் பதுமப்பாயலில் பெறவும் ஆறு வடிவங்களாக வளர்ந்தனன். இதனை 58-ம் அடியின் உரையிலும் காண்க.

அறுவரில் ஒருவன் ஏற்ப அறுவரால் நீலப் பைஞ்சுனையில் பயந்த செல்வ என்க.

256. ஆல் கெழு கடவுள் புதல்வ - கல்லால மரத்தின்கீழ் எழுந்தருளியிருந்த சிவபெருமானின் புதல்வனே!,

(வி - ரை.) கடவுள் உயர்திணைக்கு அஃறிணை வந்தது. சனகர், சனந்தனர், சனத்குமாரர், சனாதனர் என்னும் முனிவர் நால்

வரும் முத்திநெறி வேண்ட இறைவன் கல்லால மரத்தின்கீழ் தென்திசை நோக்கி யமர்ந்து சின்முத்திரை காட்டி யருளினார். இதனால் இறைவனுக்குத் தக்கிணாமூர்த்தி என்றபேரும் வழங்கு கின்றது.

256-57. மால் வரை மலை மகள் மகனே - பெரிய மலையாகிய இமயமலைக்கு அரசனின் மகளான பார்வதியின் குமாரனே !,

(வி - ரை.) மால் வரை, பெரிய மூங்கில்களை யுடைய என்று சிலரும், திருமால் போலும் வரையினை யுடைய மலையரையன் திருமகளார் மகனே என்று சிலரும் கூறுவர்.

மாற்றோர் கூற்றே - பகைவர்க்கு இயமனே !,

258. (வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ:) வெல் போர் - தான் வெல்லும் போரைச் செய்பவளும்,

வெற்றி - உலகிற்கு வெற்றியைத் தருபவளும் ஆகிய,

கொற்றவை - வனதுர்க்கையின்,

சிறுவ - புத்திரனே !,

(வி - ரை.) மகிடாசுரனைக் கொன்றது கூறினார்.

வேல் எனப் பாடம் ஓதி வெற்றி பொருந்திய வேற்படையை யுடைய போரில் வல்ல துர்க்கை எனினுமாம்.

"வென்ற வெற்றிப் போர்க்குத் தெய்வமான செயமகளார் புதல்வனே" என்றுங் கூறுவர்.

துர்க்கைக்குக் கானநாடி என்ற பேரிருத்தலின் வனதுர்க்கை எனக் கொண்டது.

259. இழை அணி சிறப்பிற் பழையோள் குழவி - ஆபரணம் தரித்த சிறப்பினை யுடைய காடுகாளின் குழந்தையே!,

(வி - ரை.) காடுகிழாள், காடுகாள், மாரியம்மை என்று வழங்கும்.

இவளும் பரமசிவனின் சக்தியாவள்.

260. (வானோர் வணங்குவிற் றானைத் தலைவ:) வானோர் தானை தலைவ - தேவர்களின் படைத்தலைவனே !,

(வி - ரை.) இது தேவசேனாபதி,

வணங்கு வில் (தலைவ) - வளையும் வில்லை யுடைய தலைவனே!,

(வி - ரை.) இதற்குத் தேவர்கள் வணங்கும் வில்வீரர் சேனைக்குத் தலைவனே என்பாரும் உளர்.

261. மாலை மார்ப - போகத்திற்குரிய கடப்பமாலையை யணிந்த திருமார்பனே !,

நூல் அறி புலவ - ஞான நூல்களனைத்தையும் அறிந்த புலவனே !,

(வி - ரை.) வேதாகமங்கள் முதலிய பல சாத்திரங்களையும் ஓதாதுணர்த்தும் பண்டிதனே என்பாரும் உளர்.

புலவன் - அறிவை யுடையவன். புலம் - அறிவு.

262. செருவில் ஒருவ - போரில் ஒப்பற்றவனே !,

பொரு விறல் மள்ள - போர்செய்கின்ற வெற்றி பொருந்திய திண்ணியனே !,

(வி - ரை.) போர் செய்ததில் பலம் பொருந்திய இளைஞனே என்று சிலரும், வீரரா யிருப்போர்க்கு வீரனா யுள்ளவனே என்று சிலரும் சொல்லுவர்.

அந்தணர் வெறுக்கை - அந்தணர்க்குச் செல்வமே !,

263. அறிந்தோர் சொல் மலை - சான்றோர் புகழ்ந்து சொல்லும் சொற்களின் ஈட்டமே !,

(வி - ரை.) 'அறிவுடையோர் புகழ்மலையே எனினும் அமையும். அறிந்தோராலே சொல்லப்பட்ட சொல்லுக்கு மிகுதியா யுள்ளவனே என்பாரு முளர்.

264. மங்கையர் கணவ - தெய்வயானை வள்ளி என்னும் இரு மகளிர்க்குங் கணவனே!,

மைந்தர்ஏறே - வீரர்க்கு இடபமே!,

(வி - ரை.) வீரர்க்கு ஆண்சிங்கமே எனினுமாம். மைந்து-வலிமை

265. வேல் கெழு தடக் கை சால் பெரு செல்வ - வேல் பொருந்திய அகன்ற கையுடைய பெரிய செல்வனே!,

(வி - ரை.) நிறைந்த பெருமை பெற்ற முக்திச் செல்வனே எனினுமாம். சால், மிகுதிப்பட்ட எனினுமாம்; உரிச்சொல்.

செல்வம், வேல் வெற்றியினாற் பெற்றது.

266-67. (குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து, விண் பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ:)

குன்றம் கொன்ற குன்றா கொற்றத்து கிழவ - கிரவுஞ்சகிரியைப் பிளந்த குறையாத வெற்றியினையுடைய தலைவனே!,

(வி - ரை.) குருகு, கிரௌஞ்சம் எனினும் ஒன்றே.

விண் பொரு நெடுவரை குறிஞ்சி கிழவ - தெய்வலோகத்தைத் தீண்டும் நீண்ட மலைகளையுடைய குறிஞ்சிநிலத்திற்கு உரிமையுடையவனே!,

(வி - ரை.) ஆகாயத்தைத் தாக்குகின்ற நெடியமலை எனினும் பொருந்தும். ஆகாயத்தைத் தொடுவது போன்ற உயர்ந்த மூங்கிலடர்ந்த குறிஞ்சி நிலத்துக்குத் தலைவனே என்பாரும் உளர்.

"சேயோன் மேய மைவரை யுலகும்" என்றது இதனாலாயே.

268. பலர் புகழ் நல் மொழி புலவர் ஏறே - பலரும் பாராட்டும் நல்ல மொழிகளையுடைய பிறமதத்தில் இருப்பவர்க்கு ஆண்சிங்கத்தின் தன்மை யுடையவனே!,

(வி - ரை.) புறமதத்தினராகிய யானைகளுக்கு முருகன் ஆண்சிங்கம் போன்றிருப்பான். ஏகதேச உருவகம்.

பலரும் புகழ்கின்ற நல் மொழியினைக்கொண்ட புலவருள் சிறந்தவனே என்றும், பக்தர்களால் ஏத்தப்பட்ட நல்ல சொற்களையுடைய புலவர்க்கு ஏறுயுள்ளவனே என்றும் கூறுவர்.

269. (அரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக:) பெறல் அரு மரபின் பெரும்பெயர் முருக - ஏனையோர்க்குப் பெறுதற்கு அரிய முறைமையினையுடைய பெரிய பொருளுடைய முருகனே !,

(வி - ரை.) பெறுதற்கு அருமையான மரபிலே பிறந்த பெரிய பெயரினை யுடைய முருகனே என்று கூறுவாரு முளர்.

பெரும்பொருள் - வீடு.

270. (நசையுநர்க் கார்த்து மிசைபே ராள:) நசையுநர்க்கு ஆர்த்தும் பேர் இசை ஆள - வீட்டை விரும்பி வந்தவர்க்கு அதனை அனுபவிக்கச் செய்யும் பெரும் புகழினை யாள்பவனே !,

(வி - ரை.) இசை பேராள, புகழினையுடைய பேராளனே என்றும், கீர்த்தியாகிய பேரை யாள்பவனே என்றும் உரைக்கலாம். ஆர்த்தல் - ஊட்டுதல்.

271-72. (அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய், மண்டமர் கடந்தநின் வென்று டகலத்து :)

அலந்தோர்க்கு அளிக்கும் - பிறரால் துன்புறுத்தப்பட்டு வந்தவர்க்கு அருள் செய்பவனும்,

மண்டு அமர் கடந்த வென்று ஆடு நின் அகலத்து பொலம் பூண் சேஎய் - மிகுந்து நடக்கின்ற போர்களை முடித்துப் (பகைவரை) வென்று கொல்கின்ற நினது மார்பினிடத்தே பொன்னாபரணங்களை யணிந்தவனும் ஆகிய சேயே !,

(வி - ரை.) அலத்தல் - துன்பம்.

"அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்." —(குறள்.)

அலந்தார்க்கு, தரித்திரராய் உள்ளோர்க்கு என்பாரு முளர். வென்று ஆடு, வெற்றியினை யுடைய எனினுமாம்.

273. பரிசிலர் தாங்கும் உரு கெழு நெடு வேள் - நின் வயம் வந்த இரவலர்க்கு விரும்பினதை அருளிக் காக்கின்ற கண்டார்க்கு அச்சம் பொருந்திய நீண்ட வடிவத்தினையுடைய வேளே !,

(வி - ரை.) இரப்போரைத் திருக்கையிலே தாங்குகின்ற தவ மிக்கவனே ! என்றும் உரைப்பர்.

இதன்றியும்,

அகலத்துப் பரிசிலர் தாங்கும் எனக் கீழுள்ளதனோடு கூட்டி மார்பினால் இரவலரைத் தாங்குகின்ற என்பாரு முளர்.

274. பெரியோர் ஏத்தும் பெரும்பெயர் இயவுள் - சான்றோர் கள் போற்றுகின்ற பெரிய திருநாமத்தை யுடைய தலைவனே !,

(வி - ரை.) ஈண்டுச் சான்றோர்கள், தேவர்களும், முனிவர் களும், பக்தர்களும் ஆவார். உயர்ந்தோர் எனினுமாம்.

இயவுள் கடவுள்.

275-76. (சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி, போர் மிகு:) போர் மிகு மொய்ம்பின் சூர் மருங்கு அறுத்த மதவலி - போர்வினையிலே மீறிய வலிமையால் சூரபதுமனின் குலமானது இல்லையாமாறு செய்த 'மதவலி' எனும் திருநாமத்தை யுடைய வனே !,

(வி - ரை.) சூர்.........மதவலி, சூரபன்மனைச் சுற்றக் குழாத்துடனே வேரறுத்த வலியையும் உறுதியையும் உடையானே என்று கூறினும் பொருந்தும்.

பொருந - வீரருக்கு உவமிக்கப்படுபவனு மிருப்பவனே !,

(வி - ரை.) பொருவப்படுபவன் என்பது பொருநன் என நின்றது. போர்மிகு பொருந என்றே வைத்துக்கொண்டு போரை மிகப் பொரவல்லவனே எனினும் பொருந்தும்.

குரிசில் - தலைவனே !,

276-77. (எனப்பல, யானறி யளவையி னேத்தி யானாது:) என யான் அறி அளவையின் ஆனாது பல ஏத்தி - என்று யான் அறிந்து சொன்ன அளவினாலே நீயும் பொருந்தி விடாது இன்னும் பலவற்றையும் சொல்லிப் புகழ்ந்து,

278. நின் அளந்து அறிதல் மன் உயிர்க்கு அருமையின் - நினது பெருமை எல்லாவற்றையும் முழுதும் அளவிட்டுரைத்தல் பலவுயிர்க்கும் அருமையானதால்,

(வி - ரை.) மன்னுயிர், உலகங்களிலே நிலைபெற்ற உயிர்களுக்கு எனினும் பொருந்தும்.

279. நின் அடி உள்ளி வந்தனென் - நினது திருவடியைப் பெறவேண்டி நினைந்து வந்தேன்.

279-80. நின்னொடு புரையுநர் இல்லா புலமையோய் - நினக்கு நிகரானவர் இல்லாத மெய்யறி வுடையவனே !,

(வி - ரை.) புரைகுநர் என்றும் பாடம்.

280-81. என குறித்தது மொழியா அளவையில் - என்று சொல்லி நீ நினைத்த வீடுபேற்றினை விண்ணப்பித்துக் கொள்வதற்கு முன்னமே,

281-82. (குறித்துடன், வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர் :)

வேறு பல் உருவில் குறு பல் கூளியர் உடன் குறித்து - வெவ்வேறு பல உருவங்களை யுடைய சிறிய பல தொழுது நிற்பார் சேரக் கருதி,

(வி - ரை.) உருவத்தில் சிறுமை. குறியாயிருப்பின், பல பூதங்கள் என்றும், கூளிகள் என்றும், பேய்க்குப் பேயாம் என்றும் உரைப்பர்.

குறித்துடன் என்று வைத்துக்கொண்டு இரவலனுடைய உளது விருப்பத்தை, முருகன் தன் மனத்துள் கொண்டு 'உடனே' என்றும், 'குறித்துக் கொண்டு (நினைத்த காரிய மின்னதென் றறிந்த)' என்றும் உரைப்பர்.

283. சாறு அயர் களத்து வீறு பெற தோன்றி - திருவிழா எடுத்த களத்தில் நீ பெருமை மிகத் தோன்றி,

284. (அளியன்றானே முதுவா யிரவலன் :) முது வாய் இரவலன்தான் அளியன் - அறிவு முதிர்ந்த மொழிகளையுடைய இந்த இரவலன் (புலவன்) தான் நினது அருளுக்கு உரியவன்,

(வி - ரை.) முதுவாய், நிரம்ப ஓதிய எனினுமாம்.

285-86. (வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென இனியவு நல்லவு நனிபல வேத்தி :)

பெரும நின் வள் புகழ் நயந்து இனியவும் நல்லவும் நனி பல ஏத்தி வந்தோன் என - சான்றோய்! நினது பெரும் புகழினை விரும்பிக் கேட்பவருக்கு இனியனவும் நல்லனவும் மிகுந்த பலவற்றைத் துதித்து வந்தோன் என்று சொல்ல,

(வி - ரை.) நல்லன - பயனுண்டாகத் தக்கன, உறுதியயப்பு வன. நனிபல, வருநன்மை பலவும் என்றும் உரைப்பர்.

குறும்பல் கூளியர் குறித்து வீறுபெறத் தோன்றி அளியன் தான் பெரும நின் வண்புகழ் நயந்து இனியவும் நல்லவும் ஏத்தி வந்தோன் என்று கூற என முடிக்க.

287. தெய்வம் சான்ற திறல் விளங்கு உருவின் - கடவுட் டன்மை மிகுந்த வல்லிமை பொலிகின்ற உருவத்தினையும்,

288. வான் தோய் நிவப்பின் தான் வந்து எய்தி - ஆகாயத்தைத் தீண்டும் உயர்ச்சியையும் உடைய தான் (முருகன்) வந்தணுகி,

(வி - ரை.) வானிலே தோன்றப்படுகின்ற ஒழுக்கத்தினையும் என்பாருமுளர்.

289. அணங்கு சால் உயர் நிலை தழீஇ - வருத்துந் தன்மை பொருந்திய கடவுட்டன்மையை உள்ளடக்கிக் கொண்டு,

(வி - ரை.) அணங்கு, அச்சுறுத்துந் தன்மை எனினுமாம்.

இஃதன்றி, அணங்கு-தெய்வத்தொழில், சால் - அமைந்து, உயர்நிலை - மிக்கு உயர்ந்த நிலையினை என்பாரும் உளர்.

289-90. (பண்டைத்தன், மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி:)

மணம் கமழ் தெய்வத்து பண்டை தன் இள நலம் காட்டி - வாசனை கமழ்கின்ற கடவுட்டன்மை யுடைய முன்பு உதித்த தனது இளைய உருவத்தை உனக்குக் காட்டி,

(வி - ரை.) இள நலம், இளமை பொருந்திய அழகினை எனினுமாம்.

291. (அஞ்ச லோம்புமதி யறிவனின் வரவென :)

நின் வரவு அறிவல் அஞ்சல் ஓம்புமதி என - நீ வீடு பெறுவதற்குக் கருதி வந்த வரவினை யான் முன்னரே அறிவேன், அவ்வீடுபேறு நினக்கடைதல் அருமை யென்று அஞ்சுதலை விட்டுவிடு,

(வி - ரை.) ஓம்புமதி, மதி முன்னிலையசை.

வரவு ஆகுபெயராகக்கொண்டு வருகையின் காரணத்தை எனினும் பொருந்தும்.

ஓம்பும் அறிவன், ஒப்பம் பெற்று அறிந்தேன் என்றும் உரைப்பர்.

292. அன்புடை நன்மொழி அளைஇ - நின்மீது அன்புடையனவாகிய பல நல்ல மொழிகளைப் பலமுறை உனக்கருளிச்செய்து,

(வி - ரை.) அன்புடனே நல்ல பொருள்களை அவனுடனே கலந்து பேசி என்றும், அன்புடனே நல்ல மொழியாலே அவனுடன் அளவளாய் என்பாரும் உளர்.

292-94. (விளிவின்று, இருணிற முந்நீர் வளைஇய உலகத், தொருநீ யாகித் தோன்ற :)

இருள் நிற முந்நீர் வளைஇய உலகத்து ஒரு நீ ஆகிவிளிவு இன்று தோன்ற - இருண்ட நிறமுடைய கடலால் சூழ்ந்த உலகில் நீ ஒருவன்தான் பிறர்க்கு வீடளித்தற்கு உரிமை யுடையவனாய்க் கேடின்றித் தோன்றுமாறு.

(வி - ரை.) கடலானது ஆக்கல் காத்தல் அழித்தல் என்னும் முந்நீர்மை யுடையதால் முந்நீர் எனப்பட்டது.

ஒரு நீ யாகி, ஒப்பற்றவன் நீயாகி எனினுமாம்.

இன்றி என்பது இன்று எனத் திரிந்து நின்றது.

294-95. விழுமிய பெறல் அரு பரிசில் நல்குமதி - மேன்மை யுடைய (பிறரால்) பெறுதற்கரிய வீடுபேற்றினை அருள்வான்,

மதி, படர்க்கைக்கண் வந்த இடைச்சொல்.

பரிசில், இரப்போர் வேண்டும் பொருள்.

(வி - ரை.) மதி பலவுடன் எனக் கூட்டி, அறிவுகள் பலவற்றுடன் இரந்த பொருள்களை அருள்வான் என்பாரும் உளர்.

## யாற்றுரு வியம்

295-96. (பலவுடன், வேறுபல் துகிலி னுடங்கி:)

வேறு பல் துகிலின் பல உடன் நுடங்கி - வேறு பல துகிற் கொடிகள் போலத் தாம் பலவும் கூட அசைந்து,

(வி - ரை.) துகில் - வத்திரம், பல் துகிலின் - பல வெள்ளைக் கொடிச் சீலை.

296-97. அகில் சுமந்து ஆரம் முழு முதல் உருட்டி - அகிற் கட்டைகளைச் சுமந்துகொண்டு சந்தனமாகிய பெரிய மரத்தைத் தள்ளி,

(வி - ரை.) முழுமுதல், பெரிய அடிக்கட்டைகளை என் பாரும் உளர்.

297-98. வேரல் பூ உடை அலங்கு சினை புலம்ப வேர் கீண்டு - சிறிய மூங்கிலினது பூவையுடைய அசைகின்ற கொம்பு கள் வேறுமாறு வேரைப் பிளந்து,

(வி - ரை.) புலம்ப, வருந்த என்பாருமுளர்.

299-300. விண் பொரு நெடு வரை பரிதியின் தொடுத்த தண் கமழ் அலர் இறால் சிதைய - தேவர் உலகத்தைத் தீண்டுகின்ற நீண்ட மலையிடத்தில் சூரிய மண்டலத்தைப் போலக் கட்டப்பட்ட குளிர்ந்த மணங்கமழ்கின்ற விரிந்த தேன்கூடு கெட,

(வி - ரை.) விண்பொரு, ஆகாயத்தை மோதுகின்ற எனினும் அமையும். வரை, மூங்கில் எனினுமாம். தண்கமழ் அலர், குளிர்ச்சி பொருந்திய மணங் கமழ்கின்ற பூவினின்றும் எடுக்கப்பட்ட எனி னும் பொருந்தும்.

300-301. நல் பல ஆசினி முது சுளை கலாவ - நல்ல பல ஈரப் பலாவின் முதிர்ந்த சுளை தன்னிடத்தே கலக்க,

301-2. மீமிசை நாகம் நறு மலர் உதிர - மலையுச்சியில் உண் டாகிய சுரபுன்னையின் நறுநாற்றமுடைய மலர்கள் உதிர,

302-3. யூகமொடு மா முகம் முசு கலை பனிப்ப - கருங் குரங் குடன் கருத்த முகமுடைய கருங்குரங்கின் ஆணும் நடுங்க,

(வி - ரை.) பனிப்ப, வருந்த எனினுமாம்.

303-4. பூ நுதல் இரு பிடி குளிர்ப்ப வீசி - செம்புள்ளிகள் பொருந்திய மத்தகத்தை யுடைய பெரிய பெண்யானைகள் குளி ரால் நடுங்கும்படி வீசி,

304-5. பெரு களிறு முத்து உடை வான் கோடுதழீஇ-பெரிய யானையின் முத்துப் பொருந்திய வெள்ளிய தந்தங்களை உள்ளடக் கிக்கொண்டு,

(வி - ரை.) தழீஇ, அடித்துக்கொண்டு எனினுமாம்.

305-6. (தத்துற்று நன்பொன் மணிநிறங் கிளர :) நல் பொன் மணி நிறம் கிளர தத்துற்று - நல்ல பொன்னும் மணி யும் நிறம் பொலியுமாறு மேலே கொண்டு குதித்து,

பொன் கொழியா - பொடியான பொன்னைக் கொழித்துக் கொண்டு,

(வி - ரை.) கரையி லொதுக்கி எனினுமாம்.

307-8. வாழைமுழு முதல் துமிய தாழை இளநீர் விழு குலை உதிர தாக்கி - வாழையின் பெரிய மரம் துண்டு படத் தெங்கின் இளநீர் பொருந்திய சிறந்த குலை உதிரும்படிக்கு அவ் விரண்டினையும் மோதி,

(வி - ரை.) முதல், அடிமரம் எனினுமாம்.

309. கறி கொடி கரு துணர் சாய - மிளகுக்கொடியின் கரிய கொத்துக்கள் சாய,

(வி - ரை.) கருந்துணர், கரிய பூங்கொத்துக்கள் எனினுமாம்.

309-11. (பொறிப்புற, மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீ இக் கோழி வயப்பெடை யிரிய:)

பொறி புற மட நடை மஞ்ஞை கோழி வயம் பெடை வெரீஇ பலவுடன் இரிய - பீலிகையுடைய இடத்தையும் மடப்பத் தை யுடைய நடையினையு முடைய மயில்களுடன் கோழியி னுடைய வலிபொருந்திய பெடை அஞ்சிப் பலவுஞ் சேரக் கூட,

(வி - ரை.) இரிய, நிலைகலங்க ஓடும்படிக்கும் எனினுமாம்.

311-4. (கேழலொ, டிரும்பனை வெளிற்றின் புன்சாயன்ன குரூஉ மயிர் யாக்கைக் குடாவடி யுளியம், பெருங்கல் விடரளைச் செறிய :)

கேழலொடு வெளிற்றின் இரு பனை புல் சாய் அன்ன குரூஉ மயிர் யாக்கை குடாவடி உளியம் பெரு கல் விடர் அளை செறிய - ஆண்பன்றியுடன் வயிரமில்லாத கரிய பனையின் சிறிய சிலாம்பை யொத்த கரிய நிறம் பொருந்திய மயிருடைய உடம்பினையும் வளைந்த அடியினையும் உடைய பெரிய கல் பிளந்த குகைகளிலே சேர,

(வி - ரை.) வெளிறு, உள்ளே வெளுப்புடைமை.

314-5. கரு கோடு ஆமா நல் ஏறு சிலைப்ப - கரிய கொம்புடைய ஆமா என்ற காட்டுமாடு ஆகிய நல்ல ரிஷபங்கள் முழங்க,

(வி - ரை.) ஆமா வென்னும் காட்டுப்பசுவின் நல்ல ஆண்கள் எனினுமாம்.

315-6. சேண் நின்று இழுமென இழிதரும் அருவி - மலையுச்சியினின்றும் இழும் என்னும் ஓசைபடக் குதிக்கும் அருவியையுடைய,

(வி - ரை.) இழிதரும், இறங்கும் எனினுமாம். அருவி நூபுரகங்கை; இழியும் ஆறு, சிலம்பாறு.

317. பழம் முதிர் சோலை மலை கிழவோனே - பழம் முதிர்ந்த சோலைகளையுடைய மலைக்கு உரிமையை யுடையவனே

துகிலின் நுடங்கி அகில் சுமந்து ஆரம் உருட்டி வேர் கீண்டு இறால் சிதைய முதுசுளை கலாவ நாகமலர் உதிர முசுக் கலை பனிப்ப இரும்பிடி குளிர்ப்ப வீசிக் களிற்றுக்கோடு தழீஇ நிறங்கிளரத் தத்துற்றுப் பொன்கொழியா வாழை முதல்

துயியத் தாழைக்குலை உதிரத் தாக்கிக் கறித்துணர் சாய மஞ்ஞை பலவுடன் கோழிப்பெடை இரிய உளியம் அளைச்செரிய ஆமா சிலைப்ப இழுமென இழிதரும் அருவி என முடிக்க.

பழமுதிர்சோலை மலை கிழவோன் என்று உடம்பொடு புணர்த்தமையான் பழமுதிர் சோலையினிடத்தும் எழுந்தருளி இருத்தலும் உரியன் எனக் கூட்டுக.

இந்தத் திருப்பதி இன்று கள்ளழகப் பெருமாள் கோயில் என வழங்குகின்றது. முருகன் இங்கு ஒரே பீடத்தில் இருதேவி யருடனும் நிற்கும் திருக்கோலமாக எழுந்தருளி இருக்கின்றனன்.

இதற்குக் காவலாளி படைத்தலைவர் வீரபாகு தேவர். இதன் முகத்துவாரத்தின்கண் பதினெட்டாம்படி கருப்பண்ண சுவாமி யின் ஆலயமும் உள்ளது.

உரை முற்றுப்பெற்றது.

௳

முருகவேள் துணை

# தோத்திரப்பா



## நேரிசை வெண்பா

1. குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையா—யென்று
மிளையா யழகியா யேறூர்ந்தா னேறே
யுளையாயென் னுள்ளத் துறை.

(பொ - ரை.) கிரவுஞ்சகிரியை வேற்படையாற் பிளந்தவனே! ஒலிக்கின்ற கடலில் மாமர உருவங்கொண்டு நின்ற சூரபன்மனைக் கொன்றவனே!, சிறிய தலைகளை யுடைத்தாய போர் செய்வதற் குரிய பூதப்படைகளை யுடையவனே!, எப்போதும் இளமையை யுடையவனே!, கட்டழகு உடையவனே!, ரிஷபவாகனத்தை ஏறிச் செலுத்தும் சிவபிரானது புதல்வனே!, என்றும் அழிவில்லா தவனே!, நீ என் நெஞ்சத்தில் எழுந்தருளி யிருக்கக் கடவாய்.

(வி - ரை.) இளையாய், போரில் எப்போதும் இளைக்காதவனே என்றும்; உளையாய், வருத்த மில்லாதவனே என்றுங் கொள்ள லாம்.

2. குன்ற மெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங் கமரரிடர் தீர்த்ததுவு—மின்றென்னைக்
கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவு
மெய்விடா வீரன்கை வேல்.

(பொ - ரை.) கிரவுஞ்சகிரியைப் பிளந்ததும் அசுரர் மாளப் போர் செய்ததும் சூரபன்மா துன்புறுத்திய அந்நாளில் அவ்

வீரமாமயேந்திரபுரியில் சயந்தன் உள்ளிட்ட வானவர்களுடைய துன்பத்தினை நீக்கியதும், இன்று என்னைக் கைசோரவிடாது நின்று காப்பதுவும், மலைமுழைஞ்சியில் அசுரன் சிறைப்படுத்தி யிருந்தவரைக் காத்ததும் எது? எப்போதும் தனது உண்மை ரூபத்தை விடாதுள்ள வீரனுகிய முருகக்கடவுளது திருக்கரத்தில் பொருந்தியுள்ள வேலாயுதமேயாம்.

3. வீரவே லுரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வே ளிருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்புங் குன்றுந்
துளைத்தவே லுண்டே துணை.

(பொ - ரை.) வீரம் பொருந்திய வேலும், கூரிய வேலும், வானவரைச் சிறைக்கூடத்தினின்றும் மீளச்செய்த திண்ணிய வேலும், கடலில் அசுரரைக் கொன்றபோது மூழ்கி வந்த வேலும், வெற்றி பொருந்திய வேலும், சூரபதுமனது மார்பினையும், கிரௌஞ்ச கிரியினையும், துளைத்துப் பிளந்த வேலும் ஆகிய செவ்வேள் என்று கூறப்படும் முருகக்கடவுளது திருக்கரத்தில் பொருந்திய வேலாயுதமானது எனக்கென்றும் துணையாக இருக்கின்றது.

4. இன்ன மொருகா லெனதிடும்பைக் குன்றுக்குக்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா—முன்னர்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும்.

(பொ - ரை.) அவுணரை யழிக்குந் தொழிலை இயற்கையாகவே பயின்றுள்ள வேலாயுதத்தால் சூரபன்மாவைக் கொன்ற வெற்றி பொருந்திய தலைவனே!, நீ முன்னர்ப் பனிக் கூட்டமும் மூங்கிற்புதரும் நெருங்கிய நீண்ட கிரௌஞ்சகிரி

யின்மேல்பட்டு அதனுள் உருவிச் செல்லுமாறு விடுத்த நினது நிகரற்ற வேலாயுதத்தை இனியும் ஒருகால் எனது துன்பம் என்னும் மலையைப் பிளப்பதற்காக எறிதல் வேண்டும்.

5. உன்னை யொழிய வொருவரையும் நம்புகிலேன் [கைக்
பின்னை யொருவரையான் பின்செல்லேன்—பன்னிரு
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே.

(பொ - ரை.) அழகிய பன்னிரு திருக்கரங்களை யுடைய தலைவனே !, வானவர்களது கொடிய துன்பங்களை நீக்கி யருளிய வேலாயுதத்தை யுடைய பெருமானே !, பக்தரைப் பாதுகாக்கத் திருச்செந்தூரில் எழுந்தருளி வாழுகின்ற முருகக்கடவுளே ! யான் உன்னையன்றி வேறெவரையும் கடவுளென்று நம்ப மாட்டுகிலேன்; இனி யெவரையும் ஒரு பொருளை வேண்டித் தொடர மாட்டேன்.

(வி - ரை.) கோலம் என்பது கோல் என விகாரப்பட்டு நின்றது.

6. அஞ்சு முகந்தோன்றி லாறுமுகந் தோன்றும்
வெஞ்சமரி லஞ்சலென வேலொன்று—நெஞ்சி
லொருகா னினைக்கி லிருகாலுந் தோன்று
முருகாவென் றோதுவார் முன்.

(பொ - ரை.) அன்புடன் 'முருகா!,' வெனச்சொல்பவரிடத்து பகைவர்க்கு அஞ்சுகின்ற முகம் தோன்றுமாயின் அவர் முன்னாக அவர்களைக் காத்தருள முருகக்கடவுளினது ஆறு முகங்களும் தோன்றும்; அப் பகைவர் வினையால் கொடிய போரில் பக்தர்க்குப்

பயம் தோன்றினால் பகைவர்க்குப் "பயப்படாதே" என்று சொல் லிக்கொண்டு வேலாயுதம் தோன்றும்; பக்தர்தம் நெஞ்சில் முருகா !' வென்று சொல்லி அவனை ஒரு கால் சிந்திப்பாராயின் அவனுடைய சீபாத மிரண்டும் அங்கே தோன்றும்.

(வி - ரை.) வெஞ்சமரந் தோன்றிய எனப் பாடங்கொண்டு கொடிய போர் உண்டாகுமாயின் என்பாரு முளர்.

7. முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே யீசன் மகனே—யொருகைமுகன்
றம்பியே நின்னுடைய தண்டைக்கா லெப்பொழுது
நம்பியே கைதொழுவே னன்.

(பொ - ரை.) முருகக்கடவுளே!, திருச்செந்தூரின் கண் எழுந் தருளி யிருக்கும் இறைவனே !, திருமாலின் மருமகனே!, சிவபெரு மானின் புதல்வனே !, ஒரு யானைக்கை யுடைய திருமுகம் பொருந் திய விநாயகப்பெருமானது திருத்தம்பியே!, நான் நினது தண்டை பொருந்திய சீபாதங்களையே என்றும் நம்பிக் கைகுவித்து வணங்குகின்றேன்.

8. காக்கக் கடவியநீ காவா திருந்தக்கா
லார்க்குப் பரமா மறுமுகவா—பூக்கும்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
விடங்கா ணிரங்கா யினி.

(பொ - ரை ) ஆறு திருமுகங்களை யுடையவனே !, பூக்கின்ற கடப்பமலர் மாலையை யணிந்தவனே !, முருகக்கடவுளே !, கதிர் விட்டுப் பாடஞ் செய்கின்ற வேலாயுதத்தை யுடையவனே !, பக்த ரைப் பாதுகாக்கக் கடமைப்பட்டுள்ளவனாகிய நீ இன்றெனைக் காக்க விரும்பாது அசிரத்தையா யிருந்தால் என்னைக் காப்பது

யார்க்குக் கடமையாகும்? என்னைக் காக்க இதுவே தகுந்த காலம்; இதனை உணர்வாயாக; இனியேனும் என்மீது கிருபை செய்யக்கடவாயாக.

9. பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன் பாதங்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு—சுருங்காத
வாசையா னெஞ்சே யணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகழ்.

(பொ - ரை.) நெஞ்சமே! நீ திருப்பரங்குன்றில் பக்தர்க்கருள் செய்யும் நிமித்தம் எழுந்தருளி யிருக்கும் பன்னிரண்டு திருக்கரங்களை யுடைய தலைவனது சீபாதங்களைக் கைகுவித்துத் தொழுது உவகை நீர்ப்பொங்கும் கண்கள் குளிரும்படி தரிசித்துக் குறையா அன்புடன் திருமுருகாற்றுப்படை என்னும் திவ்வியப் பிரபந்தத்தைப் பூசை செய்வதற்குரிய பொருளாகக் கொண்டு தினமும் வழிவாது பாராயணஞ் செய்து வருவாயாக.

(வி - ரை.) ஆல் என்னும் உருபு உடனிகழ்ச்சி.

10. நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினால்—முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைத்த வெல்லாந் தரும்.

(பொ - ரை.) கடைச்சங்கப் புலவருள் முதன்மை பெற்றிருந்த நக்கீரர் அருளிச்செய்த திருமுருகாற்றுப்படை யென்னும் சிறந்த நூலை ஒருவன் தன் நெஞ்சத்தை ஒரு முகமாக்கத் தினந்தோறும் பாராயணம் செய்து வருவானாயின் தலைமை பொருந்திய அழகும் பெருமையும் வாய்ந்த முருகக்கடவுள் அவன் முன்னே

